# குமரகுருபரன்



மலர் 11] சார்வரி-ஹு மார்கழி-மீ 1-ம்டு (15-12-60) [இதழ் 12

# ஆசிரியர் குழு

1. திரு. கே. எம். வேங்கடராமையா அவர்கள் M. A. B. O. L., பிரின்ஸிபால், செந்தமிழ்க்கல்லூரி, திருப்பனந்தாள்.
2. திரு. கே. சிவராமன் அவர்கள் M. A., சைவ சித்தாந்த தத்துவ விரிவுரையாளர் காசிச் சர்வகலாசாலை, காசி.
3. ராவ்சாஹிப், வித்துவான். திரு. கு. அருணாசலக் கவுண்டர் அவர்கள், தலைமைத் தமிழ் விரிவுரையாளர், ம. தி. தா. இந்துக் கல்லூரி, திருநெல்வேலி.
4. திரு. ஆ. சி. ஷண்முகநயினார் பிள்ளை அவர்கள் B. A., B. L., வழக்கறிஞர், தென்காசி.
5. திரு. டி. எச். விவேகானந்தம் பிள்ளை அவர்கள் B. A., L. T., (Verification Officer) இந்து அறநிலைய இலாகா, 20, நுங்கம்பாக்கம் ஹைரோடு சென்னை – 6.
6. திரு. ம. ரா. சண்முகசுந்தரம் பிள்ளை அவர்கள் B. A., B. L., இந்து சமய அறநிலைய உதவி ஆணையர் (ஒய்வு), "வள்ளுவர் குறடு" மதுரை.

---

T. M. குமரகுருபரன் பிள்ளை B. A., B. L.,
நிர்வாக ஆசிரியர்.

## உள்ளுறை



---

உ

திருச்செந்திலாண்டவன் துணை

# சந்தா நேயர்களுக்கு அறிவிப்பு



நூலிது மார்கழி மாதத்துடன் "குமரகுருபரன்" பதினெறு ஆண்டுகள் நிரம்பி, தைத்திங்கள் முதல் தேதி பன்னிரண்டாவது ஆண்டு எய்துகிருன். தங்களுடைய அன்புக் ஆதரவும் என்றென்றும் பெருகி நிற்கப் பெரிதும் விழைகின்ருன்.

சந்தாப் பாக்கியுள்ளவர்கள் பாக்கியை அனுப்புவதுடன் 1961-ம் வருடச் சந்தாவையும் சேர்த்து அனுப்பி குமரகுருபரன் வளர்ச்சிக்கு மென்மேலும் ஊக்கமளிக்க வேண்டுகின்றேன். சந்தாப் பாக்கியில்லாத நண்பர்கள் வழக்கம் போல் 1961-ம் வருடச் சந்தாவை முன் கூட்டியே அனுப்பித் தரவும் கேட்டுக் கொள்கிறேன்.

சந்தா நம்பர் குறிப்பிட்டு எழுதுவதும், முகவரி மாற்றம் உடனுக்குடன் தெரிவிப்பதும் காலதாமதத்தை அகற்றி அலுவலகத்தின் சேவையையும் துரிதப்படுத்தும். புதுச் சந்தாதார்கள் "புதிய சந்தா" என்ற விபரம் குறிப்பிட்டு எழுதுவது நலம்.

நிர்வாக ஆசிரியர்.

திருச்செந்திலாண்டவன் துணை

# "குமரகுருபரன்"

## பதினென்றுவது மலரின் பொருளடக்கம்

| பொருள் | | பக்கம் |
|---|---|---|

## Articles in English





உ
சிவமயம்
திருச்செந்திலாண்டவன் துணை




மலர் 11 || சார்வரி-ஹு மார்கழி-மீ 1 ம்-உ (15–12–60) || இதழ் 12

# சிதம்பரச் செய்யுட் கோவை

தருமையாதீனம் முதுபெரும்புலவர்,
**மாணிக்கவாசகன்.**
(முத்து. சு.)

[ கட்டுரை 41 ]

சொல், பொருள், என்று இரண்டு உண்மை அறிஞர் அனைவர்க்கும் தெரியும். சொல்லின் விரிவு சத்தப்பிரபஞ்சம். பொருளின் விரிவு, அர்த்தப் பிரபஞ்சம். உலகம் என்பது சப்தார்த்தப் பிரபஞ்சம். சொல்லுலகு, பொருளுலகு என்னும் இரண்டும் அறிதல் மக்கட்கு இன்றியமையாதது. சொல்லும், அச்சொல்லின் ஆற்றலும், பொருளும், அப்பொருளின் ஆற்றலும் என நான்குள. இவற்றை வடமொழியில், சப்தம் சப்தசக்தி, அர்த்தம், அர்த்தசக்தி என்பர். சப்தப்பிரபஞ்சம், வர்ணம்,

பதம், மந்த்ரம் என்றும், அர்த்தப் பிரபஞ்சம் தத்துவம், புவனம், கலே, என்றும் சைவசித்தாந்தம் கூறும். பொருளுலகைப்பற்றி யன்றிச் சொல்லுலகும் நில்லாது. இவ்விரண்டுலகுருவமும் உடையதாய் விளங்குவது சுத்தமாயை. சுத்தமாயையே அவ் விரண்டற்கும் முதற்காரணம். சொல்லாற்றல் பொருளாற்றல் இரண்டையும் சேனுவரையர் (சொல். 11, 18, 55, 60, 161.) உரை யிலும் காணலாம். இறைவன் எங்கும் நிறைந்தவன். எங்கும் என்னும் சொல்லின் பொருள் அவ்விரண்டுலகமும் அவற்றைக் கடந்து நிற்கும் சூழலும் ஆகும். இங்கு இதனின் மேல் அதனே விளக்குதல் இயலாது. மாயைக்குள் அகப்பட்ட உயிர்களைத் தம் திருவடிக் கீழ் வாழ்விக்கத் திருவுளங் கொண்டு, அவ் விரண்டுலகையும் தடத்த வடிவமாகக் கொண்டு, இறைவன் விளங்குகின்ருன். இவ்வுண்மையை,

"மறையுமாய் மறையின் பொருளுமாய் வந்தென் மனத் திடை மன்னிய மன்னே" என்னும் திருவாசகத்தின் நுண் பொருளால் விளங்க உணரலாம். வேதங்கள் ஐயா என்று அழைத்துக் கொண்டு தேடுகின்றன. சொல்லுருவாகிய அவ் வேதங்களுக்கு விண்ணும் பின்னிட ஓங்கியும், பாதலமும் மேல் தளமாக ஆழ்ந்தும், எண் திசையும் கடந்து அகன்றும், விளங் கும் நுண்ணியன் பரமசிவன். அவன் சொல்லாயும் பொருளாயும் உருக்கொண்டுவாராவிடின், அவனே அறிவார் யார்? தோற்றச் சுடரொளியாயும், சொல்லாத நுண்ணுணர்வாயும் வந்து அறி வாம் தேற்றம் அவன். அத்தகைய கடவுள் அல்லும் பகலு மாயும், அந்தியும் சந்தியுமாயும் சொல்லும் பொருளெலாமாயும், தோத்திரமும் சாத்திரமும், பாவெலாமாயும் நிற்றல் ஏன்? செல்லும் நெறிகாட்ட வேண்டியன்ருே? உலகுக் கொருவனு மவன் ஓசையொலி யெலாமானுல் அவ்வோசையொலி வழியே சென்றுதான் அவனே அடைதல் கூடும்.

"சொல்லானைச் சொல்லார்ந்த பொருளானைத் துகள்ஏதும்
இல்லானை எம்மானை என்மனத்தே வைத்தேனே"

"சொல்லாகிச் சொற்பொருளாய் நின்ருர் போலும்"
"ஆனந்து முன்னெழுத்தாய் நின்ருர் போலும்"

"மந்திரத்தை மனத்துள்ளே வைத்தார் போலும்"
"மந்திரமும் மறைப்பொருளு மானுன்"

என்பவற்ருல் மந்த்ரம், பதம், வர்ணம், ஆகிய சொல்லுல குருவாய் விளங்கும் சிவபெருமான் சொற்கள் ஒன்ரேடொன்று தொடரும் புணர்ச்சியாலும் உணர்ச்சிக்கு எய்துகின்ருன். அதனையும்,

"பதம்சந்திப் பொருளுருவாம் புண்ணியன்" என்றருளினுர் நம் அப்பர். ஏன் அவ்வாறு ஆனுன் இறைவன்? கல்லாதன எல்லாம் கற்பிக்கவும், காணுதன எல்லாம் காட்டவும் அன்ரே? சொல்லுக்குரியகருவி நாக்கு (நால்கு என்னுஞ் சொல் நாக்கு என மருவிற்று. நாலுதல், தொங்குதல், நான்கு என மருவியதும் அவ்வடிவினதே). அந்நாக்கில் நின்றும் உரையாடுபவன் பரமசிவனே.

"பழத்தின் இரதமாம் பாட்டிற் பண்ணும்
ஒரு காலுமையாளோர் பாகனுமாம்
உள்நின்ற நாவிற் குரையாடியாம்"

என்று அவ்வோவாத சத்தத் தொலியுருவனையே உணர்த்தினுர். பாட்டான நல்ல தொடையால் நல்ல பரிசை அறியமாட்டாதார்க்கும் அறிவிக்க வேண்டி, அவர் உணர்வையே ஊர்தியாக வுடையவனுய் விளங்குகின்ருன். அதனையும் "உணர்வென்னும் ஊர்வதுடையாய் போற்றி" என விளக்கினுர். என்ன விளக்கினுலும், "சொல் (-நெல்) லார்ந்த் சோற்றுத்துறை"யில் மூழ்கினுர்க்குப் பல்லார்ந்த வாயால், இருள் சேர் இருவினையும் சேராமைக்கு ஏதுவான பொருள் சேர்புகழ் பாடும் புண்ணியம் வாயாது. வாய்ப்பின், இறைவன் அவர் வாயானும் அதன்வழியே அவனை எண்ணும் மனத்தானும், அம்மனத்தில் அவனைக் கருதும் கருத்தானும், அக்கருத்தை அறிந்து முற்ற முடிப்பானும் ஆவான். இதிற் சிறிதும் அறிவுடையோர் அயிரார். அவ்வாறு ஆன அயிராவணம் (ஐயுருதவாறு; அயிர்-நுண்மணல் அது புற்றுருவைக் குறித்ததொடர்). "சொல்லுருவில் சுடர் மூன்ருய் உருவம் மூன்ருய்த் தூநயனம் மூன்ருகி ஆண்ட ஆரூர் நல்லுருவிற் சிவனடியே அடை"ந்த நம் அப்பருக்கு அன்றி வேண்டி கிடைத்த போதெல்லாம் வாரிவாரி அப்பருக்கு எப்படி எய்தும்?

இறைவனது (சொலற்கு அரிய) சூழலை அறிந்து அச் சொல்லற்கு அரியானைச் சொல்லி அவன் திருவடிக் கீழ்ச்சொல்லிய பாட்டின் பொருளுணர்ந்து சொல்லுவார்க்கு மறை நான்கும் ஆறங்கமுமான மறைவெளிப்படும். 'உரையால் உணரப்படாத அடி'யே 'உரைமாலை யெல்லாம் உடைய அடி' என்று திருவடியைப் போற்றி நம் கருவடியைமாற்றும் அப்பரடிகளை எப்பொழுதும் போற்றுதல் நம் கடனாகும்.

"சொல்லாய்ப் பொருளானாய் நீயே என்றும்
சோற்றுத் துறையுறைவாய் நீயே என்றும்
செல்வாய்த் திருவானாய் நீயே என்றும்
நின்ற நெய்த்தானா என் நெஞ்சுளாயே"

என்றுணர்த்தியருளிய அவரது சிவஞானச் செல்வத்தை அளவிடல் நம்மனோர்க்கு எளிதோ? இதிற் 'செல்வு திரு' என்றதொடு 'திருவும் மெய்ப்பொருளும் செல்வமும் எனக்கு உன் சீருடைக் கழல்கள்' என்றதை ஒருங்கு வைத்துணர்ந்தால், திருவேறு செல்வம் வேறு எனல் விளங்கும். அத்திருவேறு இத்தெள்ளியராதலும் வேறு.

'சொல்லும் பொருளும் இறந்தசுடர்' 'சொல்லுதற்கு அரிய ஆதி' நாம் 'சொல்லிப்பரவும் நாமத்தான்' ஆகித் தனது 'சொற்பதங்கடந்த தொல்'லைப்பேரருள் நிலைக்கு நம்மைக் கூவியருளிச் சென்று அப்பேரா இன்பப் பெருங்கடலுள் ஆரா இன்பம் அளிக்கின்றான்.

பரமசிவனது கடந்த இயல்பு மாணிக்கவாசகரால் பலபட உணர்த்தப்பட்டது. அவற்றுள் 'சொல்லிறந்து நின்றதொன்மை' பலமுறை கூறப்பட்டது.

1. (அ) 'பாதாளம் ஏழினுங்கீழ் சொற்கழிவு பாதமலர்'

(ஆ) 'பாதம் இரண்டினும் வினவில் பாதாளம் ஏழினுக்கப்பால்.'

2. (அ) 'போதார் புனைமுடியும் எல்லாப் பொருள்முடிவே'

(ஆ) 'சோதிமணி முடி சொல்லிற் சொல்லிறந்து நின்ற தொன்மை'.

அத்தகையிற் கடந்த கடவுள் நம்பொருட்டுச் சொல்லும் பொருளும் ஆனஈருலகினையும் இயக்கும் இயவுளாய் உருவங் கொள்ளுங்கால், சொல்லும் பொருளும் ஆகின்ருன். ஆயினும், 'சொல்' அவ்வியவுளினது ஆற்றல், 'பொருள்' அவ்வியவுள், சொல்லாகச் சக்தியையும் பொருளாகச் சிவத்தையும் உணர்த்து வது பண்டைய இயல்பு நெறி.

இதுகாறும் எழுதியவற்றை மிக்க சுருக்கமாகத் தெரிவிக்க வேண்டின், இச்சிதம்பரச் செய்யுட்கோவையிலிருந்தே, ஈரடி யைக்காட்டிச் சிவபிரான் ஈரடியைச் சேரடி உணரலாம். சேரடி என ஏவலாம் சேரவிழைவாளையும், அவை,

"சொல்லொடு பொருளுமாய்த் தோன்றி நின்றுமச்
சொல்லையும் பொருளையும் துறந்து நின்றனை."

என்றவை கலிநீக்கும் வலிவுள்ள அடிகள் ஆதலின், கலிப்பா வடியாயின. அவ்வீரடியும் பிறவியம்போதரங்கத்தை ஈரடியே யாகும். பிறவியறுதலே வீடு, பேரின்பம் உறுதலேபேறு. திருவிளையாடலில் இடைக்காடன் பிணக்குத்தீர்த்த படலத்தில்,

"என்னையிகழ்ந் தனனேசொல் வடிவாய்நின் இடம்பிரியா
இமயப் பாவை
தன்னையும் சொற் பொருளான உன்னையுமே இகழ்ந்தனன்என்
றனக்கியா தென்று
முன்னைமொழிந் திடைக்காடன் தணியாத முனிவிர்ப்ப
முந்திச் சென்ருன்
அன்னவுரை திருச்செவியின் ஊறுபா டெனவுறைப்ப
அருளின் மூர்த்தி."

"தென்பால் ஓர் ஆலயம்கண்டு அங்கண் இனிதமர்ந் தான்" என்று பரஞ்சோதிமுனிவர் பாடியதாலும் அறியலாம்.

"சொல்லும் பொருளும் என்நடமாடுந் துணைவருடன்
புல்லும் பரிமணப் பூங்கொடியே"
என்ருர் அபிராமப்பட்டரும்.

'வாசகம்' 'வாச்சியம்' இரண்டும் முறையே சொல்லும் பொருளும் என்றுணர்த்தும் வடசொல், அவற்றை அறிந்தாரே,

'முடிவிலா மொழிகட்கெல்லாம் வாச்சிய முதலே போற்றி' என்னும் சிவஞான முனிவர் திருவாக்கையும்,

"பெருந்துறை புகுந்து பேரின்ப வெள்ளம்
மூழ்கிய புனிதன் மொழிந்த வாசகமே
வாசகம் அதற்கு வாச்சியம்
தூசகல் அல்குல்வேய்த் தோளிடத் தவனே"

என்னும் சிவப்பிரகாசர் திருவாக்கையும் உணர்வர்.

இது சிதம்பரச் செய்யுட்கோவைக் கட்டுரை. இங்கே 'வாசகம்' சிவகாமியம்மையார். வாச்சியம் நடராசப்பிரான். இவரைத் தொழுதவருள், பதஞ்சலி முனிவரே இங்கு எண்ண நின்ருர். அவர் பாம்பின்கால் உடையவர் ஆவர். ஆயினும் அவரைப் பாம்பாகவே சொல்வது மரபு. புலிக்கால் முனிவரைப் புலியாகவே கொண்டு கூறுவதும் அன்னதே. சிதம்பரமும்மணிக் கோவைப் பாட்டில், அரவு ஐந்து ஆட்டுவிக்கும் உம்மை ஒரு மாசுணம் நின்று ஆட்டுவிக்க, நீர் நின்று ஆடுகின்றது என் கொல்? (9) என்றதில் அறவிக்கப்பட்டது.

பாம்பிற்குக் 'கட் செவி' என்பதும் ஒரு பெயர். அதற்குப் பொருள் இருதிறத்தாற் கூறப்படும். கண்ணையே செவி (காது) ஆகக் கொண்டு காண்டலும் கேட்டலும் உடையது என்பது ஒருதிறம். 'கண்ணுற் காணுந்தூரம் காதாற் கேட்கவற்ருன (வல்லதான) செவியை' உடையது என்பது மற்ருெருதிறம். முன்னைத்திறம் எல்லார்க்கும் தெரியும். பின்னைத்திறம் 'ஞானு மிர்தம்' உபதேசத்தால் உண்டார்க்கே தெரியும்.

அதில் 44 ஆவது திருவகவலில், "கறையணற்கட் செவிப் பகுவாய்ப்பாந்தள்" என்ற திருப்பாட்டு உரையில், "அறிவோடே கூடிய ஔடதத்தானும் மந்திரத்தானும் பரிகாரம் உடையோர்க் குக், கண்ணுற்காணுந்தூரம் கேட்க வற்ருன செவியையும் அணரியிலே கறையையும் பெரிய வாயையும் உடைய பாம்பின் நஞ்சு அடங்கப்படா நின்ற பல்லாலே வடுவுண்டாகக் கடித்தா லும் தீண்டாத இயல்பான இத்தன்மைபோலவும்....பந்த பாசத் தொடக்குறுவாரல்லர்" என்றுளது.

பாம்புக்கால் முனிவர் சொல்லுருவைக் கேட்டற்கும் பொருளுருவைக் காண்டற்கும் வல்லவர். எல்லாரும் அவற்றில் வல்லவரேயாயினும், அவர் கண்ணாகிய ஒரு பொறியாலேயே இரண்டும் பெறவல்லார். ஏனையோர் ஒவ்வொன்றற்கும் ஒவ்வோர் (இந்திரியம்-) பொறி உடையர். அதனால், குமரகுருபரர்,

'சத்தமும் ஆகிஅச் சத்தத் தாற்பெறும்
அத்தமும் ஆகலின் அனந்தன் கண்களே
உத்தமன் ஐந்தெழுத் துருவம் காண்பன'

என்று பாடியருளினார்.

இங்குப் பதஞ்சலி முனிவரை 'அனந்தன்' என்றது ஆதிசேடன் அவதாரம் ஆதலின். அனந்தனுக்குக் காதில்லை. வில்லிபுத்தூரர் 'அனந்தன்' என்னும் பாவலனொடு வாதிட்டு, அவன் காதை அறுக்க நேர்ந்துழி, அவன் என் காதறுத்து என் பெயர்ப் பொருளை இனிது விளக்குகின்றீர் என்ற வரலாறு இங்கு நினைக்கத்தக்கது.

திருவைந்தெழுத்தின் உருவத்தையும் (சொல்லையும்) அவற்றின் வடிவாகிய நடராசப் பிரானையும் (பொருளையும்) கண்ணாலேயே கேட்டும் கண்ணாலேயே கண்டும் பேரின்பம் உறும் பேறு அம்முனிவர்க்கே உரியது.

உருவம் கண்ணுக்குத் தெரியாது. வடிவம் கண்ணால் அறியத்தக்கது. இதனை நச்சினார்க்கினியர் தொல்காப்பியத்தில் எழுத்ததிகாரவுரையில் (பாயிரத்தில்) விளக்கினார். தொல்காப்பியர் மெய்ப்பாட்டியலில் உருவம் காட்டலாகாதவற்றுள் ஒன்றென்றார்.

திருவைந்தெழுத்தின் உருவத்தை உண்மை விளக்கம் என்னும் அருள் நூலில் மிக்க தெளிவுற உபதேசிக்கக் காணலாம். அந்நூலுக்கு அடியேன் எழுதிய விரிவுரை, 'ஞான சம்பந்தம்' என்னும் தருமையாதீனத்திங்கள் வெளியீட்டில் முற்றும் வெளியிடப்பட்டுளது. இது விளம்பரமன்று. நம் முளம் பரமன்றுட் சென்றதால் எழுதலாயிற்று.

---

(தொடரும்)

# திருநீறு

திரு T. H. விவேகானந்தம் பிள்ளை அவர்கள் B. A., L. T.,
சென்னை.

—•—

"சேனக்குரு கூடலில் அன்று ஞானத்தமிழ் நூல்கள் பகர்ந்து
சேனைச் சமணோர் கழுவின்கண் மிசையேறத்
தீரத்திருநீறு புரிந்து மீனக்கொடி யோனுடல் துன்று
தீமைப்பிணி தீரவுவந்த குருநாதா!"

"கதிவாழ்க, வேத, நல் ஆகமம்வாழ்க, நற்கண்மணிஉன்
பதிவாழ்க, சைவம், திருநீறும் கண்டியும் வாழ்க"

சாம்பல் ஒன்றே எல்லாப் பொருள்களின் உண்மைத் தூயநிலையை உணர்த்தவல்லது. இதை எடுத்துக்காட்டவே, முழுமுதற் கடவுளாகிய சிவபெருமான், சண்ணித்த வெண்ணீற்றனாய் விளங்குகிறான். எல்லாம் ஒடுங்கிய காலத்து, எஞ்சி நிற்பது சாம்பல் ஒன்றேயாம். இவ்வுண்மையினை விளக்கவே, இறைவன் "காடுடைய சுடலைப் பொடிபூசி"யாக, காட்சி கொடுத்தருளி, திருஞானசம்பந்தரின் 'உள்ளங்கவர் கள்வனாக' விளங்கி, ஆளுடைபிள்ளையை, சிவஞான போதமுண்ட பிள்ளையாக, நடமாடச் செய்தான். 'பொடிபூசி' என்பதால் இறைவனுடைய மூன்று திருமேனிகளில் ஒன்றாகிய 'அருஉருவம்' என்பதைக் குறித்து நிற்கிறது.

ஸ்காந்தம், சிவரகசியகண்டத்திலுள்ள, சிவாஷ்டோத்தர சதநாமாக்களில், 41வது நாமாவளியின் பொருள் பின்வருமாறு:–

"பாபங்களையும், ரோகங்களையும், மாயாபாசத்தையுமழித்து, ஞானத்தைக் கொடுக்கும் 'பஸ்மா' என்ற விபூதியால் உத்தூளனஞ் செய்துக் கொள்ளப்பட்ட உடம்பை உடையவர்". (சிவபெருமான்). இதுதான் முண்டகாதி உபநிஷத்துக்களில்

" சிரோவிரதம் " எனப்படுகிறது. "உண்மாசு கழுவது நீறென்றே உபநிடதம் உரைப்பக் கேட்டும் ". (திருவிளையாடல்) காண்க.

" வேதத்தில் உள்ளதும் நீறு, வெந்துயர் தீர்ப்பதும்நீறு... முத்தி தருவதும் நீறு...பத்தி தருவதும் நீறு...பூச இனியதும் நீறு, புண்ணியம் ஆவதும் நீறு, பேச இனியதும் நீறு, பெருந் தவத்தோர்களுக்கெல்லாம் ஆசை கெடுப்பதும் நீறு " என்ற ஆளுடைபிள்ளையாரின் அமுதத் திருவாக்கு இங்கு ஒப்பிட்டு மகிழ்தற்குரியது. இவ்வுண்மை புலப்படவே, இறைபணி நிற்கும் மெய்யடியார்களும், ஞானிகளும், தூய சாம்பலை மெய்யார அணிந்து விளங்குகின்றனர். "முனிவர் அணிவது நீறு... காண இனியதும் நீறு, கவினைத்தருவதும் நீறு".

அதிசூரன்மீது, முன்மேற்காணுத வெண்ணீற்றின் பொலிவு கண்ட பொழுதே, ஏனுதிநாதநாயனுர், " இவர் அண்டர்பிரான் சீரடியார் ஆயினுர்" என்று மனம்கொண்டு, அவர் வஞ்சனைக்கு, மனம் உவந்து, ஆளானுர். " தக்கோர் புகழ்வதும் நீறு ". திருநீற்றுக் கோலத்தினை நினைப்பூட்டிய வண்ணுனை, சேரர் பெருமான் தொழக்கண்டு, சிந்தை கலங்கி, முன்வணங்கி, வண்ணுன், " அடியேன், அடிவண்ணுனெச் சேரர் பிரானும், அடிச்சேரன் அடியேன் என்று திருநீற்றின் வாரவேடம் நினைப் பித்தீர், வருந்தாதேகும்," எனமொழிந்தார். " பேணி அணிப வர்க்கெல்லாம் பெருமை கொடுப்பதும் நீறு ".

எச்செயல் தொடங்கு முன்னும் திருவெண்ணீறணிந்து தொடங்க வேண்டுமென்பது, இறைவன் அருளிய முத்துப் பல்லக்கில், ஆளுடைபிள்ளையார் ஏறுங்கால் நிகழ்த்திய செய லாற் காணலாம்.

" மாலையாமம் புலர்வுறும் வைகறை
வேலைசெய் வினைமுற்றி வெண்ணீறணி
கோலமேனிய ராய்க்கைம்மலர் குவித்து
ஏலஅஞ்செழுத்தோதி எழுந்தனர் "

திருநீற்றுப் பேற்ருல், கோள்நீக்கமும், பகைவர்களை வெல்லுதலும் கூடும், என்று ஆளுடைபிள்ளையார் அச்சாணி போன்ற அருள்வாக்கால் விளம்புகிருர்.

“கொத்தலர் குழலியோடு விசயற்குநல்கு
குணமாய வேடவிகிர்தன்
மத்தமும் மதியுநாகம் முடிமேல் அணிந்தென்
உளமே புகுந்தஅதனுல்
புத்தரோடமணை வாதில் அழிவிக்கும் அண்ணல்
திருநீறு செம்மைதிடமே
அத்தகு நல்லநல்ல அவை நல்லநல்ல
அடியாரவர்க்கு மிகவே.”

சிவபெருமான் பூசும் திருநீற்றினை பூசுவதால், தீவினைகள் தங்கா; சிவகதிகிட்டும்:

“கங்காளன் பூசும் கவசத் திருநீற்றை
மங்காமற்பூச மகிழ்வரே யாமாகில்
தங்காவினைகளும் சாரும் சிவகதி
சிங்காரமான திருவடி சேர்வரே”

என்கிறது திருமந்திரம்.

“வந்தவினையும் வருகின்ற வல்வினையும்
கந்தனென்று சொல்லக் கலங்குமே—செந்திநகர்ச்
சேவகா! என்று திருநீ(று) அணிவார்க்கு
மேவ வாராதே வினை.”

என்பது ஒரு அருமையான பழம்பாடல். மந்திரம் வல்லார், எந்நெறியினராயினும், மந்திரிக்க, திருவெண்ணீற்றையே உபயோகிக்கின்றனர்.

காசநோயுற்ற, ஸ்ரீ ஆதிசங்கரபகவத்பாதர், திருச்செந்தூர் இலைவிபூதியை உட்கொண்டதினுலும், மெய்யார அணிந்து கொண்டதினுலும், பொருமை கொண்ட அபிநவகுப்தருடைய ஏவுதலினுல் தனக்கேற்பட்டிருந்த உடற்பிணியைப் போக்கிக் கொண்டார். “உடம்பிடர்தீர்க்கும் இன்பம் தருவதும் நீறு.” திருச்செந்தூர் இலைவிபூதியின் மகிமையை, தான் பாடியுள்ள ஸ்ரீ சுப்பிரமணியபுஜங்கத்தில் 25வது செய்யுளில் விவரித்துள்ளார். அதன் மொழிபெயர்ப்பைக் காண்க ;

"கண்டால்நின் இலைநீறு கைகால்வலிப்புக்
காசம், கயம்குட்டம் முதலாய நோயும்
விண்டோடுமே, பூதபைசா சம்யாவும்
வினையாவுமே, செந்திலமர் தேவதேவே."

(கவிமொழிபெயர்ப்பு ஆசிரியர்; கவியரசு கு. நடேச கவுண்டர் அவர்கள்)

திருநீற்றின் பெருமையை சான்றோர் ஒருவர் கூறுவது பின்வருமாறு :—

"ஆதிபகவன் ஞானவடிவழலிற் பூத்து நித்தியமாய்
அணிந்தோர் தமக்கு வசிகரமாய் அருந்தினோர்கட்காரமுதாய்
நீதி அறியும் பசுமலத்தை நீக்கும் ஒருநற்குறிகாட்டி
நிகழ்பேரின்பக்கடலூட்டி நின்றபுகழ் வெண்திருநீறே."

திருவெண்ணீற்றுக்கு வழங்கும் பெயர்க்காரணத்தை விளக்கும் பேரூர்ப்புராணச் செய்யுள் பின்வருமாறு: —

"நீடல் உறுந்தீவினையனைத்தும் நீற்றிவிடலால் நீறென்றும்
வீடில்வெறுக்கை தருதலினால் விபூதியென்றும் உயிர்தோறும்
கூடுமலமாசினைக் கழுவும் குணத்தால் சாரம் என்று மடம்
ஓட வளர்சோதியைத்தரலாற் பசிதம் என்றும் உரைப்பாரால்."

வெறுக்கை — வீடுபேற்றுச்செல்வம்.

விபூதி என்பதற்கு மேலான ஐசுவரியம் என்பது பொருள் (வி-மேலான, பூதி—ஐசுவரியம்; ஐசுவரியம்—ஈஸ்வரசம்பந்தம்.)

"நீறுபுனைவார் வினையை நீறு செய்தலாலே
வீறுதனி நாமமது நீறென விளங்கும்
சீறு நரகத்துயிர் செலாவகை மருந்து."

திருநீறு உடற்பிணியை நீக்கும் மருந்தாயும், நரகத்துக்கு உயிர் செலாவகை மருந்தாயும் அமைகிறது.

திருநீறு அணியவேண்டிய காலங்கள் :—

காலை, நண்பகல், மாலை, நள்ளிரவு, உணவின் முன்னும், பின்னும், உழைப்பின் முன்னும், பின்னும், உறக்கத்தின் முன்னும், பின்னும், உரையாடலின் முன்னும், பின்னும், கற்றலின் முன்னும்பின்னும், கற்பிப்பதன் முன்னும்பின்னும், கோயிலுக்குப் போகுமுன்னும், பின்னும், ஆண்டவனைத் தொழுவதற்கு முன்னும் பின்னும்; இன்னும் முக்கியமான காலங்களிலும்.

திருநீறு அணிய வேண்டிய இடங்களும், அவற்றால் எய்தவேண்டிய பேறுகளும் :—

இடம் :—

(1). உச்சி (2) நெற்றி (3) மார்பு (4) கொப்பூழ் (5, 6,) இரு முழந்தாள்கள் (7) வலத்தோள் (8) வலமுழங்கை. (9) வலமணிக் கட்டு (10) இடத்தோள் (11) இடமுழங்கை (12) இடமணிக்கட்டு (13, 14) இருசெவிகள். (15) கழுத்தினடி (16) முதுகந்தண்டினடி என்பன.

பேறு :—

(1) ஒழுக்கம் (2) அன்பு (3) அருள் (4) ஆசாரம் (5) உபசாரம் (6) உறவு (7) சீலம் (8) தவம் (9) தானம் (10) வந்தித்தல் (11) வணங்கல் (12) வாய்மை (13) துறவு (14) அடக்கம் (15) அறிவு (16) அருச்சித்தல்.

மேற்கூறிய விவரங்கள் 'சிவதீக்கை' என்னும் நூலின்கண் குறிப்பிட்டுள்ளன. எனினும், 'நீரில்லா நெற்றிப் பாழ்' என்பதை யாகிலும் மறவாது மனதில் கொண்டு, நெற்றியில் நீறு பூசும் வழக்கத்தை நாம் ஒவ்வொருவரும் கையாள வேண்டும்.

திருநீறு அணியவேண்டிய முறையும் பயனும் :—

" பக்தியொடு 'சிவசிவா' என்று திருநீற்றைப் பரிந்து
கையால் எடுத்துப் பாரினில் விழாதபடி
அண்ணாந்து செவியொடு பருத்தப் புயமீதில்
ஒழுக, நித்தமுவிரல்களால் நெற்றியில்
அழுந்தலுற நினைவாய்த் தரிப்பவர்க்கு
நீடுவினையணுகாது, தேகம் பரிசுத்த
மாய்நீங்காமல் நிமலன் அங்கே சத்தியோடு
நித்தம் விளையாடுவான்: முகத்திலே
தாண்டவம் செய்யும் திரு, சஞ்சலம்வராது
பரகதியுதவும் இதுவரையே சத்தியும்
சிவனும் என்னலாம், மத்தினியமேருஎன
வைத்து அமுதினைக் கடையும்
மால் மருகனுனமுருகா ! மயிலேறி விளையாடு
குகனே, புல்வயல்நீடு மலைமேவு குமரேசனே."

(குமரேசர் சதகம்.)

ஸ்ரீ சுவாமிநாதன் பிள்ளைத்தமிழில் திருநீறு :—

பெருமையிற் சிறந்த எங்கள், திருஞானசம்பந்தர், எண்ணு யிரம் சமணர்கழுவேற, சமயவாதம் புரிந்தபோது, அருளிய திருப்பதிகத்தில், சொல்லப்பெறும், தெய்வீகச் சிறப்புடையது திருநீறு. மீனவன் (கூன்பாண்டியன்) சுரநோயைத் தவிர்த்து அவனை நின்றசீர் நெடுமாறனுக்கி, சைவம் தழைக்க செய்தது திருநீறு. திருஞானசம்பந்தர், "மந்திரமாவது நீறு" என்னும் திருநீற்றுத் திருப்பதிகத்தைப்பாடி, திருநீறு தடவிய காட்சி யைக் காண்க:

"திருமுகம் கருணைகாட்டத் திருக்கையால் நீறுகாட்டிப்
பெருமறை துதிக்கும் ஆற்றல் பிள்ளையார் போற்றிப்பின்னும்
ஒருமுறைதடவ அங்கண் ஒழிந்து வெப்பகன்றுபாகம்
மருவுதீப்பிணியும் நீங்கி, வழுதியும் முழுதும் உய்ந்தான்"

குளிர்ந்த அருள் நோக்கினரான திருநாவுக்கரசர், 'திரு நீறு அணியாதவர் வாழும் ஊர் சுடுகாடாம்' என்று பறை யறைந்தாற்போல் அறிவித்த பெருமையுடையது திருநீறு.

"திருவெண்ணீறணியாத திருவிலூரும்
அவையெல்லாம் ஊரல்ல, அடவிகாடே"

என்பது அப்பர் அருள்வாக்கு.

"நீரில்லா நெற்றிப்பாழ்" என்று, என்றுமுள்ள புகழ் படைத்த ஔவையார் அருளும் தகுதியுடையது திருநீறு.

நான்கு வேதங்களின் முடிவான உபநிடதங்களும், குறை ஒன்றுமில்லாத ஸ்மிருதிகளும், புராணங்களும் புகலும் பெருமை யுடையது திருநீறு.

செம்மை நோக்குடைய சிவந்த கண்களுடைய, விடை யேறும் பெருமானுர் திருமேனியில், பிரகாசிக்கும் பூச்சு, திருநீறு.

திருவேரகத்தில் எழுந்தருளிய குமரப்பெருமானின், நெற்றி யில் இருந்து, காப்பதும் திருநீறே.

இப்பொழுது பாட்டின் அருமைச்சுவையை அனுபவிக்கலாம் :—

"எங்கள் பெருமான் சம்பந்தன் எண்ணுயிரவர் சமணர்கழு
ஏறவாது செய்யுங்காலை இயம்பும்பதிகச் சிறப்பினதாய்

அங்கணுவுக்கரசர் நீறணியாவூர் காடாகுமென
அறைந்தபெருமைத்தாய், நீறில்லாநெற்றிப் பாழென்னத்
தங்குபுகழ் சேரவ்வை சொலுந்தகை மைத்தாய்,நான்மறையின்முடி
தாழ்வில், மிருதிபுராணங்கள் சாற்றும் பெருமைபல உடைத்தாய்ச்
செங்கண் ஏற்றர் திருமேனித் திகழும் பூச்சாந்திருநீறு
திருவேரகத்துக் குமரனுதல் சேர்ந்து காக்கப் பரவுதுமே".

கோவைக் கவியரசு கு. நடேசகவுண்டரவர்கள் இயற்றிய (சுவாமிமலை) திருவேரகம் ஸ்ரீ சுவாமிநாதன் பிள்ளைத் தமிழ். காப்புப் பருவம்-10 வது கவி.

"நாமார்க்கும் குடியல்லோம், நமனை யஞ்சோம்" என வீர முழக்கம் செய்த அப்ப மூர்த்திகள், வெண்ணீரணியாதவர்களைக் காண்டற்கும் அஞ்சுகின்றேன் என்பதைக் கேளுங்கள்.

"பிணியெலாம் வரினும் அஞ்சேன் பிறப்பினோடு
இறப்பும் அஞ்சேன்
துணிநிலா அணியினான் தன்தொழும்பரொடு
அழுந்தி அம்மால்
திணிநிலம் பிளந்துங் காணுச்சேவடி
பரவி வெண்ணீறு
அணிகிலா தவரைக்கண்டால் அம்ம நாம்
அஞ்சும் ஆறே"

தருமபுர ஆதின குருமுதல்வர் (ஸ்தாபகர்) ஸ்ரீலஸ்ரீ குரு ஞானசம்பந்த தேசிகபரமாசாரிய சுவாமிகள், தம்குருவாணையின் படி, தமது சிவாநுபவங்களையெல்லாம் செறித்துப் பெரும் பொருளடங்கிய சிறுநூலாக-சிந்தை தெளிவிக்கும் தெளி தேனுகவுள்ள "சிவபோகசாரம்" என்னும் ஞானசாத்திரத்தை அருளிச் செய்தார். அதில் அமைந்துள்ள ஒரு அருமையான பாடலைப் படித்து பயன் பெறுக:-

"நீதியில்லா மன்னர் இராச்சியமும் நெற்றியிலே
பூதியிலா செய்தவமும் பூரணமாம் – சோதி
கழலறியா ஆசானும், கற்பிலரும், சுத்த
விழலெனவே நீத்துவிடு."

பொருள் வெளிப்படை. என்னே, வெண்ணீற்றின் மகிமை!

'மாலற நேயம்மலிந்தவர் வேடத்திற்கு,' இன்றியமையாத சிவச்சின்னம் திருநீறு. மும்மலங் கழித்து, அடியார் நடுவுள் இருக்கும் அருளைப் பெற்று, 'பூசுவதும் வெண்ணீறு' என்ற கோலம் கொண்டார், சிவன்எனெப் பொலிவர். 'வெந்த நீறு விளங்க அணிந்திலர்,' சிவபெருமானின், திருவடியை எப்படி அடைய முடியும்? அவன் திருமுடியை எப்படி காணமுடியும்?- திருமாலாயிருந்தாலும் சரி, நான்முகனுயினும் சரி. அன்பின் சின்னம் திருநீறு. அன்பே சிவம். ஆக சிவனே திருநீறு. "சத்தியமாவது நீறு," "துதிக்கப்படுவது நீறு," "மாணந்தகைவதுநீறு," "மெய்யெலாம் வெண்ணீறு சண்ணித்தமேனியன்" என்றும், "தூயவெண்ணீறு துதைந்த பொன்மேனியன்" என்றும், அப்ப மூர்த்திகள், முக்கண்மணியை, அழகொழுகும் உயிர் ஓவியமாகத் தீட்டிக்காட்டுகிறுர்.

மணி, மந்திர, ஔடதம் என்பது முறையே ருத்திராட்சம், திருவைந்தெழுத்து, திருநீறு என்பனவாம். மந்திரம் ஆவதும் நீறு. 'மருந்தவை மந்திரம்' என்பதால், திருவைந்தெழுத்தே திருநீறு, திருநீறே திருவைந்தெழுத்து எனலும் பொருந்தும். "மருந்தைவை, மந்திரம் மறுமை நன்னெறியவை மற்றும் எல்லாம், திருநெல்வேலியுறை செல்வர்தாமே" எனப்பொருள் கண்டால், திருநீறுவேறல்ல, திருவைந்தெழுத்து வேறல்ல, மறுமைக்குரிய நல்லவழிகளில் ஈடுபடுத்தும், இறைவனருள் விழியின் வந்த, அக்கமணி (உருத்திராக்கம்) வேறல்ல, பின் இவை யாவும், திருநெல்வேலியுறை செல்வர்தாமே என்பது விளங்கும். (திருநெல்வேலிப்பதிகம்—சம்பந்தர் தேவாரம் காண்க)

"மாலறநேயம் மலிந்தவர் வேடமும்
ஆலயம்தானும் அரன் எனத்தொழுமே" (சிவஞான போதம்)

"மும்மையால் (விபூதி, ருத்திராட்சம், சடை) உலகாண்ட மூர்த்தி" நாயனுரையும், "முழுநீறு பூசிய முனிவரையும்," "முழுநீறணிமேனியன்"—முழுமுதற் கடவுளாகவே நினைத்து, சுந்தரமூர்த்திநாயனுர், தாம்பாடிய திருத்தொண்டர் தொகையில் வணங்கியுள்ளாரென்ருல், திருநீற்றின் பெருமையை, இன்னும் சொல்லவும் வேண்டுமோ?

ஓர் அற்புத நிகழ்ச்சி :—

சுமார் முன்னூறு வருடங்கட்குமுன், செந்திலாண்டவன் கனவிலிட்ட கட்டளைப்படி, திருச்செந்தூர் மேலக்கோபுரம், திருவாவடுதுறை ஆதீன மடத்தைச் சேர்ந்த, ஸ்ரீலஸ்ரீ தேசிக மூர்த்தி சுவாமி தம்பிரான் அவர்களால் நிர்மாணிக்கப்பட்டது. இறைவனால் இட்டபணியை நிறைவேற்ற தம்பிரானவர்களிடம் போதிய பொருளில்லை. ஆண்டவன் அருள்மட்டுமிருந்தது. திருப்பணியை பரபரப்புடன் ஆரம்பித்தார். கூலியாட்களுக்கு, கூலிக்கு பதிலாக செந்திலாதிபன் இலைவிபூதியை, வேலையை விட்டு வீட்டுக்குப் போகும்போது கொடுத்து, தூண்டிகை விநாயகர் கோவிலைத் தாண்டிப் போய்தான், பெற்றுக்கொண்ட விபூதி பிரசாதத்தைத் திறந்துப் பார்க்கவேண்டுமென்று பணித்தார், தம்பிரானவர்கள். கூலியாட்களும் அப்படியே செய்தனர். கையைத்திறந்து பார்க்குங்கால், தத்தம் உழைப்புக்குத்தக்க ஊதியமிருப்பதை ஒவ்வொருவரும் கண்டனர். இன்னம்பர் ஈசன், ஆறுமுகச்சிவனாக, "பொழுதுபோக்கி புறக்கணிப்பாரையும் எழுதும் கீழ்கணக்கு" என்ற தம்பணியை இங்கும் செய்துள்ளது வெளிப்படை.

வையம்நீடுக; மாமழை மன்னுக;
மெய்விரும்பிய அன்பர் விளங்குக
சைவநன்னெறி தான்தழைத் தோங்குக
தெய்வவெண் திருநீறு சிறக்கவே.

---

# திருவாதிரை

திருமுறைச்செம்மல், மதுரகவி
**வித்துவான், திரு. தா. ம. வெள்ளைவாரணம் அவர்கள்**
*தமிழ்ப்பேராசிரியர், செந்தமிழ்க்கல்லூரி, திருப்பனந்தாள்.*

**தொடக்கம் :**

இன்று மார்கழி பிறந்துவிட்டது. சைவர்களும் வைணவர்களும் பாவைப் பாட்டுப் பாடுகிறார்கள். கோவில்களில் சங்கும் முழவும் தமருகமும் முழங்குகின்றன. குளிரையும் பொருட்படுத்தாமல் பஜனைக் கோஷ்டிகள் ஊரையும் கோவிலையும் வலஞ்சூழ்கின்றன. பெரியவர்கள் உள்ளத்தில் பக்திப் பெருக்கம் மேலிடுகிறது. குழந்தைகளின் உள்ளம் சுண்டலையும் பொங்கலையும் சுவைக்கிறது. இங்ஙனம் ஆண்டில் ஒருநாள் அல்ல; ஒருமாதம் முழுதும் நடைபெறுகிறது. இம்மாதத்தில் வரும் மற்றோர் சிறப்புத்தான் திருவாதிரைத் திருநாள்.

**திருவாதிரை நட்சத்திரம் :**

இருபத்தேழு விண்மீன்களில் திரு என்னும் அடைமொழி பெறுவன இரண்டுள்ளன. அவை திருவாதிரை, திருவோணம் என்பனவாம். திருவாதிரை சிவனுக்கு உகந்தது. திருவோணம் திருமாலுக்கு உகந்தது. சிவனது திருமேனியில் சரிபங்கு கேட்ட திருமால், நட்சத்திரத்திலும் சரி பங்கு பெறுகிறார்போலும் !

திருவாதிரை என்னும் விண்மீன் ஓரையன் என்ற நட்சத்திரமண்டலத்தில் உள்ளது. இது மஞ்சளும் சிவப்புமான ஒளியை வீசுகின்றது. இது சூரியனை விட 1,200 மடங்கு ஒளி படைத்துள்ளது. ஆயினும், மிகத் தொலைவில் இருப்பதால் தான் சிறு விண்மீனாகத் தோன்றுகிறது. இதன் ஒளிக்கதிரை விஞ்ஞானிகள் ஆராய்ந்தார்கள். அதனால் திருவாதிரையில் சோடியமும், மக்னிஷியமும், இரும்பும் இருப்பதாகவும் ஹைட்ரஜன் இல்லை என்பதாகவும் கூறுகிறார்கள்.

ஆதிரையான் :

சிவபெருமானை ஆதிரையான் என்று ஆன்றோர் கூறுகின்றனர். இதனால் சிவபெருமான் திருவாதிரை நாளில் பிறந்தவன் என்று எண்ணிவிடாதீர்கள்! அவன் தாயுமிலி; தந்தையிலி; தான் தனியன்; நினைவிருக்கட்டும்.

சங்க காலத்தில் எழுந்த பரிபாடலின் எட்டாம் செய்யுள் "ஆதிரையின் முதல்வன் சிவன்" என்று மொழிகிறது. 5-ஆம் நூற்றாண்டினரான காரைக்காற்பேயார் "ஆதியனை ஆதிரை நன்னாளானை" என்று பாடியிருக்கிறார். 7-ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த அப்பர் சுவாமிகளும் சம்பந்த மூர்த்திகளும் முறையே "ஆதியனை ஆதிரை நன் னாளாந் தன்னை" என்றும், "ஆடலன் ஆதிரையன் ஆரூர் அமர்ந்தானே" என்றும் தேவாரத்தில் செப்புகிறார்கள். 9-ம் நூற்றாண்டில் விளங்கிய சுந்தர மூர்த்திகள் "ஆதியன் ஆதிரையன் அனலாடிய ஆரழகன்" என்று இசைத்துள்ளார். முத்தொள்ளாயிரமும் "ஆதிரையான் ஆதிரையான்" என்று அறை கூவுகின்றது. என்றும் உள்ள முழுமுதற்கடவுள் இங்ஙனம் ஆதிரையின் பெயர் சூடிக்கொண்டது அற்புதமே!

ஆதிரை என்னும் கற்பரசி :—

கி. பி. இரண்டாம் நூற்றாண்டில் காவிரிப்பூம்பட்டினத்தில் சாதுவன் என்னும் வணிகன் வாழ்ந்தான். அவனது மனைவி ஆதிரை என்று அழைக்கப்பட்டாள். ஆதிரை ஒரு கற்பரசி. சாதுவனோ பொருட் பெண்டிர் பொய்ம் மயக்கில் மூழ்கினான். பரத்தை பணமெலாம் பறித்துக்கொண்டாள்; காணம் இலி என்று சாதுவனைக் கைகழுவி விட்டாள். அறிவு வந்த அவன் ஆதிரையின் பால் அணைந்தான்; ஆக்கம் தேட எண்ணினான். அலைகடல் நடுவுள் பலகலம் செலுத்தினர் வணிகர். அவற்றுள் ஒன்றிலே சென்றான் சாதுவன். விதி சும்மா விடுகிறதா? புயல் விசியது. கப்பல் கவிழ்ந்தது. சாதுவன் உயிர்தப்பி ஓர்கரை ஏறினான். சிலர் மடிந்தனர்; சிலர் மயங்கினர்; சிலர் காவிரிப்பூம்பட்டினம் புகுந்தனர்.

இந்தச் செய்தியைக் கேட்டாள் ஆதிரை. தன் கணவனைக் காணவில்லை. அவன் இறந்தான் என்று எண்ணி விட்டாள்.

எரிமூட்டினுள். எல்லாரும் காணத் தீப் பாய்ந்தாள். கற்புத்தியின் முன்னர் கானத் தீ என்ன செய்யும்? தீ அவளைச் சுடவில்லை. "உன்றன் கணவன் உயிரொடு வருவான்; நின்பெரும் துன்பம் நீ ஒழிவாய்" என்று ஓர்வாக்கு அந்தரத்தில் எழுந்தது. அதனுல் ஆதிரையும் கணவன் வருகைக்குக் காத்திருந்தாள். சாதுவன் திரும்பினுன். தகுதியாக இல்லறம் நடந்தது. அத்தகைய ஆதிரை, மணிமேகலைக்கு முதற் பிச்சையிட்டாள்.

இங்ஙனம் ஆதிரை நாளின் பெயர்சூடிய ஒருத்தியைக் கற்பரசி என்பதாக மணிமேகலை என்ற நூல் புகழ்கிறது.

### சிவம் பெருக்கும் பிள்ளையின் திருஅவதாரம் :—

சிர்காழியில் சிவபாத ஹிருதயர் தவங்கிடந்தார். பூதி சாதன விளக்கம் போற்றல் பெருது ஒழிகின்றதே என்று அவர் மனம் வாடியது. அவரது மனவாட்டம் நீங்கத் தவத்தின் பயன் நெருங்கியது. ஏறத்தாழ கி. பி. 638-ல் அருக்கன் முதல் கோள்கள் அனைத்தும் உச்சங்களிலே நின்றன. அவைபெருக்க வலியுடன் நின்றன. அப்போது பேணிய நல்லோரையும் எழுந் தது. அன்று திருக்கிளரும் திருவாதிரைத் திருநாள். இந்நிலையில் சிவம்பெருக்கும் பிள்ளையார் - திருஞான சம்பந்தர் - திருஅவதாரம் செய்தருளினுர். இச்செய்தியைப் பெரிய புராணம் பேசுகிறது.

### அயவந்தியில் அருச்சனை :

7-ஆம் நூற்ருண்டில் திருச்சாத்த மங்கையில் நீல நக்கர் என்னும் திருத்தொண்டர் திகழ்ந்தார். அவர் அயவந்தி அமர்ந்த நாயனுரை ஆகமத்தொடு அருச்சனை புரிபவர். ஒரு சமயம் ஆதிரை நாள் வந்தது. நீல நக்கர் தம்மனைவியுடன் திருக் கோவிலை அடைந்தார். அயவந்தியாரை நீராட்டி அமுதூட்டி அருச்சித்தார். மனைவியார் பூசனைக்குத் துணையாய்ப் பொருள் ஏந்தி நின்ருர். பூசனை நிரம்பியது. நீலநக்கர் ஐந்தெழுத் தோதுகின்ருர்.

அப்போது ஒரு சிலம்பி அயவந்தியார் மீதுவிழுந்தது. அயல் நின்ற மனைவியார் அதுகண்டார்; ஆற்ருது ஓடினுர். குழந்தை மேல் சிலம்பி விழுந்ததாக எண்ணினுர்; சிலம்பி விழுந்த இடத் தில் வாயால் ஊதி எச்சிலும் துமிந்தார். நீலநக்கர் மனைவியின்

செயல்கண்டு மனம் கொதித்தார். மனைவியை விடுத்துத் தான் மட்டும் வீட்டுக்குச் சென்றார். துயின்றார். கனவில் இறைவன் தோன்றி மேனியைக் காட்டி "மனைவியார் துமிந்த பக்கம் நீங்க மறுபக்கம் சிலம்பியின் கொப்புளம் காண்" என்று கூறினன். நிலநக்கர் விழித்தெழுந்து தமது பிழையை உணர்ந்து மனைவியை மீட்டும் வீட்டுக்கு அழைத்து வந்தார்.

இந்த நிகழ்ச்சி ஓர் ஆதிரை நாளில் நடந்ததாகத் திருத் தொண்டர் புராணம் செப்புகின்றது.

## வீதி விடங்கரின் பவனி :

ஆரூரின் அணிமாட நெடுவீதியைக் காண விழைகிறீர்களா? வாருங்கள் போவோம். வீதியில் மக்கள் திரள் திரளாகத் திரண்டு நிற்கிறார்களே! இங்கு ஏன் இவ்வளவு கூட்டம்? இவர் களைப் பாருங்கள்! வெண்டலைகளை மாலையாகப் புனைந்திருக் கிறார்களே! ஆமாம். இவர்கள்தாம் விரதிகள். அதோபாருங்கள் வீட்டுவாசலிலே மாணிக்கமும் சாதிப் பவளமும் மலரும் கலந்த மாலைகள் தொங்குகின்றன. கொடிகளும் ஏராளமாகப் பறக் கின்றன. விதானங்கள் வேறு சிறப்பாக இருக்கின்றனவே. சங் கொலி கேட்கிறது. பறையோசைக் காதைத் துளைக்கிறது. கல்ல வடத்தின் முழக்கமும் கலந்து கொள்கிறது.

நம்மை ஒரு விமானம் நெருங்குகிறது. அதன்மேல் முத்து விதானம் பிடிக்கிறார்கள் பக்தர்கள். அங்கே யார் பவனி வரு கிறது? உங்களுக்குத் தெரியாதா? அவர்தான் எளிவந்தவான் கருணை—வீதிவிடங்கன் — தியாகேசன். பக்கத்தில் பாவையர் கவரி வீசுகிறார்கள். முன்னே பலிசெல்கிறது. பவனிகாணும் பத்தர்கள் பரவசமாகின்றனர். "மணியே, பொன்னே, மைந்தா, மணாளா" என்கின்றனர் ஒருசாரார். "எம்மான், ஈசன், எந்தை, என்னப்பன்" என்கின்றனர் மற்றொருசாரார். "தியாகேசா! நும்மைத் தொழா நாட்கள் எல்லாம் துன்பம்; நும்மை ஏத்தும் நாட்கள் எல்லாம் இன்பம்" என்கிறார் ஒரு அனுபூதிமான்.

இத்தகைய உலாக்காட்சி கி.பி. ஏழாம் நூற்றாண்டில் நடந்தது. அப்பர் சுவாமிகள் அன்று திருவாரூருக்குச் சென் றிருந்தார். அன்று திருவாதிரைத் திருநாள். இந்த அருமைக்

காட்சியை ஒரு பதிகம் முழுவதிலும் செறித்துக் காட்டியுள்ளார். அந்தப்பதிகம் திருவாதிரைத் திருப்பதிகம் என்று அழைக்கப் படுகிறது அதில் ஒருபாடல் :—

" முத்து விதானம் மணிப்பொற் கவிரி முறையாலே
பத்தர் களோடு பாவையர் சூழப் பலிப்பின்னே
வித்தகக் கோல வெண்டலை மாலை விரதிகள்
அத்தன் ஆரூர் ஆதிரை நாளால் அதுவண்ணம். "

திருநாளைப் போவார் :

நந்தனார் கதையை நம் காதுகள் பலதடவையும் கேட்டிருக் கின்றன ; கண்கள் கூடப் படக்காட்சியாகக் கண்டுள்ளன. நந்தனார் வேதியரிடம் செல்கிறார். "மார்கழித் திருநாள் வரப் போகிறது ஐயே போய்வர உத்தாரம் தாரும், தாரும்" என்று கேட்கிறார். இங்ஙனம் கீர்த்தனைகள் பாடப்படுகின்றன. ஆனால் சேக்கிழார் அங்ஙனம் கூறவில்லை. மார்கழித் திருவாதிரை யன்று நந்தனார் வீடு பெற்றார் என்பதாகப் பெரியபுராணம் பேச வில்லை. நாயன்மார் நட்சத்திரக் கோவையில் " நந்தனார் புரட் டாசி உரோகணியில் முத்தி பெற்றார்" என்று தெரிவிக்கிறது.

நாயன்மார்களுள் சிலர் :

அரிவாட்டாயர் தை மாதத்து ஆதிரையில் வீடுபெற்றார். கணநாத நாயனார் பங்குனி மாதத்து ஆதிரையில் முத்தி பெற்றார். கூற்றுவநாயனார் ஆடி மாதத்து ஆதிரையில் அரன் அடி அடைந்தார். சடையனார் மார்கழி மாதத்துத் திருவாதிரையில் சிவனடி சேர்ந்தார். விறன்மிண்டர் சித்திரை ஆதிரையில் எடுத்த பொற்பாதத்தில் ஒன்றினார்.

பெரியபுராண அரங்கேற்றம் :

திருவருட்டுணையால் செய்யப்பெற்ற பெரிய புராணத்தைச் சேக்கிழார் ஒரு சித்திரை திருவாதிரை தொடங்கி மறுசித்திரை திருவாதிரையன்று நிறைத்து அரங்கேற்றினார், இச்செய்தியை உமாபதிசிவம் கூறுகிறார். அவர் பாடிய செய்யுள்:—

" தாளுடைய திருச்சிலம்பு புலம்பநடம் புரியும்
தன்மைஅர னுக்கிசைந்த பேர்வழியின் நாளும்,
ஆளுடைய பிள்ளையார் அவதரித்த நாளும்,
அவரமுது திருஞானம் அமுதுசெய்த நாளும்,

சூளுடை ஆதிரைநாளாம்; சித்திரைஆ திரைநாள்
தொடங்கிஎதி ராம்ஆண்டு சித்திரைஆ திரையின்
நாளுடைய கதைமுடிப்பம் எனக்குன்றை வேந்தர்
நடத்த அனைவருமிருந்து கேட்டனர்நாள் தோறும்".

இச்செய்யுளினால் திருஞான சம்பந்தர் திருவவதாரம் செய்த நாளுடன், அவர் ஞானப்பால் அருந்திய நாளும் திருவாதிரையே என்பது விளங்குகிறது.

**இராசேந்திரனின் பிறந்த நாள் :**

கங்கைகொண்ட சோழபுரத்தில் கண்கவரும் சிற்பங்கள் நிறையுமாறு கற்றளி எடுத்தவன் முதல் இராசேந்திரசோழன் ஆவான். அவன் மார்கழித்திங்கள் திருவாதிரை நாளில் பிறந்தவன் என்று திருவொற்றியூர் கல்வெட்டொன்று கூறுகிறது. அந்நாளில் ஆண்டுதோறும் திருவொற்றியூர் இறைவன் நெய்யாடுவதற்காக 150 காசு நிதிவைத்துள்ளான்.

**திருவாதிரை நோன்பு :**

மார்கழி மாதத்தில் மதியம் நிறைகின்ற பௌர்ணமியன்று (திருவாதிரை கூடிய நாள்) தொடங்கிப் பத்து நாட்கள் வரையிலும் இந்நோன்பு சங்ககாலத்திலே கொண்டாடப் பட்டது. பேதைப் பருவத்து இளம் பெண்கள் விடியற்காலத்தில் எழுந்து தம் தாயர் துணையுடன் நீர் நிலைகளுக்குச் சென்று நீராடுவர். இங்ஙனம் தாய்மாருடன் சென்று நீராடுவதனால் இந்நோன்பு "அம்பாஆடல்" என்று அழைக்கப்பட்டது.

மற்றும் இந்நோன்பு சிற்சில ஆண்டுகளில் மார்கழியின் இறுதியில் தொடங்கித் தைமாத முதலில் முடிவதும் உண்டு. அதுபற்றி இந்நோன்பு "தைந்நீராடல்" என்று அழைக்கப் பட்டது. இந்நோன்பை அனுசரித்துகி. பி. 769-ஆம் ஆண்டை ஒட்டி வாழ்ந்தவரான ஆண்டாள், "மார்கழித் திங்கள் மதி நிறைந்த நன்னாள்" என்றுபாடி யிருக்கிறார்,

கி. பி. 862-ம் ஆண்டை ஒட்டி வாழ்ந்தவரான மாணிக்க வாசகப் பெருமான் இதை அனுசரித்துப்பாடியதாகத் தெரியவில்லை. திருவெம்பாவையில் "மார்கழி நீராடேலோர் எம்பாவாய்" என்றுதான் காணப்படுகிறது ஆகவே மணிவாசகர்

காலத்தில் இந்நோன்பு மார்கழி 30 நாட்களிலும் கொண்டாடப் பட்டது போலும்.

**திருவாதிரைக்களி :**

தற்காலத்தில் மார்கழித் திருவாதிரைக்குப் பத்து நாட்களுக்கு முன்பாகக் கோவில்களில் விழாக்கொண்டாடப்படுகிறது. நாடொறும் சுவாமி புறப்பாடு உண்டு. சிறப்பாகப் பத்தாம் நாள் நடராசப்பெருமானுக்கு அபிஷேக ஆராதனை நடைபெறும். நடராசர் திருவீதிக்கு உலா வருவார். இஃது எல்லாச் சிவன் கோவில்களிலும் கொண்டாடப்பட்டாலும் சிதம்பரத்தில்தான் மிகமிகச் சிறப்பாகக் கொண்டாடப்படுகிறது. அங்குத் தேரோட்டமும் உண்டு.

அங்கே பக்தர்கள் இறைவன் திருக்காட்சியை (தரிசனத்தைக்) கண்டுகளிக்கின்றார்கள். களிப்பு மனத்தளவில் மட்டுமன்றிப் பொங்கி வழிந்து புறம்பேயும் காண்கிறது. களிப்பை வெளிக் காட்டக் களியைப் படைத்து உண்கின்றனர்.

இவ்வாறு தின்னும் களியையும், காணும் களியையும் சிலேடையாக்கித் திருவாதிரைக்களி என்று புலவர் கூறினர். நாமும் அக்களிவரும் நாளுக்குக் காத்திருப்போமாக.

---





# பரணரும் பசலையும்

வித்துவான்: திரு. ம. சிவசம்பு அவர்கள்
*தமிழ்ப் பேராசிரியர், தருமையாதீன தமிழ்க்கல்லூரி, தருமபுரம், மாயூரம்.*



சில குளம், கிணறு முதலியவற்றிலுள்ள நீர் பச்சைப் பசேர் என்று நம் கண்ணுக்குக் காட்சி அளிக்கின்றது. அந்தப் பச்சை நிறமுள்ள தண்ணீரைப் பாசி படிந்த தண்ணீர் என்கிறோம். அத்தண்ணீரைக் குடிப்பதற்கு நாம் வெறுப்பு அடைகிறோம். "தாயைப் பழித்தாலும் தண்ணீரைப் பழித்தல் கூடாது" என்ற பழமொழி அறிந்த சிலர் தண்ணீரில் இறங்கி அப்பாசியைக் கையால் ஒதுக்குகிறார்கள். அது நீங்கி விடுகிறது. தண்ணீர் குடித்துவிட்டு வருகிறார்கள். அவர்கள் வந்தவுடன் அத்தண்ணீர் மீண்டும் பச்சை நிறத்தோடு காட்சி அளிக்கிறது. இது நாம் வாழ்க்கையில் காணுகின்ற காட்சி. இதைப் பார்க்கின்ற பொழுது நமக்கு எந்தவிதமான உணர்வும் தோன்றவில்லை. ஆனால் கவிஞர்களும் சமயவாதிகளும் தண்ணீரில் காணுகின்ற பாசியை வைத்து விளக்கும் கருத்துக்கள்தான் எத்தனை. நாம் உணரமுடியாத சில உண்மைகளை இந்தப் பாசியை வைத்துக்கொண்டு மிக எளிதாக விளக்குகிறார்கள்.

**பாசியும் பசலையும்**

தலைவன் பொருள் காரணமாகத் தலைவியைப் பிரிந்தான். பிரிவுத்துன்பம் பொறுக்காமல் தலைவி வருந்தினாள். உடலில் சில வேறுபாடுகள் தோன்றின. மெலிந்தாள். பொலிவு இழந்தாள். ஒளிமங்கிக் காணப்பட்டாள். அவள் நிறமும் மாறுபட்டாள். இந்த நிறவேறுபாடு தலைவன் அருகில் இருக்கின்ற பொழுது ஏற்படுவதில்லை. அவன் சிறிது பிரிந்தாலும் நிற வேறுபாடு தலைவியிடம் உண்டாகிறது. தலைவன் பிரிவால் தலைவியினது உடலில் உண்டாகும் நிறவேறுபாட்டைப் பசலை

என்று சொல்லுகிறார்கள். இப்பசலேயால் தலேவி படும்துன்பம் சொல்லமுடியாதது. அவள் மாமைக்கவினே அழித்து விடுகிறது. தண்ணீரிலுள்ள பாசி தண்ணீரின் அழகைக் கெடுத்து விடுவது போல இந்தப் பசலே தலேவியின் அழகைக் கெடுத்து விடுகிறது. பாசி படிந்த தண்ணீரில் கைவைத்தவுடன் பாசி நீங்குவது போலத் தலேவியைத் தலேவன் தீண்டியவுடன் இப்பசலே நீங்கி விடுகிறது. தண்ணீரிலிருந்து கையை எடுத்தவுடன் பாசி மீண்டும் மூடிக்கொள்வதைப்போல தலேவன் தலேவியைப் பிரிந்தவுடன் அப்பசலே தலேவியைப் பற்றிக் கொள்ளுகிறது. இக் கருத்தை பரணர் மிகத் தெளிவாகக் கூறுவதைப் பாருங்கள்.

"ஊர் உண்கேணி உண்துறை தொக்க
பாசி அற்றே பசலே — காதலர்
தொடுவுழித் தொடுவுழி நீங்கி
விடுவுழி விடுவுழிப் பரத்தலானே." (குறு — 399.)

**பசலே என்பது என்ன?**

தலேவனது பிரிவாற்றுமையால் தலேவிக்கு வருவதோர் நிற வேறுபாடு. இதனேப் பசத்தல், பசலே பாய்தல் என்றெல்லாம் கூறுகிறுர்கள். பின்னத்தூர் திரு. நாராயணசாமி ஐயர் நற்றிணே உரையில் "பசலே என்பது கண்ணுடி மேல், வாயினுலூதிய ஆவி பட்டு அக்கண்ணுடி மழுக்கமடைவது போலத் தலேவியின் நெற்றியிலுள்ள ஒளி தலேவனேப் பிரிவதால் மழுங்கித் தோன் றல்" என்கிறுர். இதனேப் பீர்-பொன் என்றும் உரைப்பர். பசலே பாய்தல், மெய்யின் கண் தோன்றுகின்ற காரணத்தால் இது ஒரு மெய்ப்பாடு என்கிறுர் தொல் காப்பியர்.

பசியட நிற்றல் பசலே பாய்தல் (மெய்ப்பாடு 22)

**பசலேயும் இருளும்:**

தலேவன் சிறிது பிரிந்தாலும் மிகவிரைவாகப் பசப்புத் தோன்றி தலேவியை வாட்டுகிறது என்ற கருத்தை வள்ளுவர் மிக அழகாகக் கூறுகிறுர்.

நன்ருக விளக்கு எரிந்து கொண்டிருந்தது. எங்கும் ஒரே வெளிச்சமாக இருந்தது. விளக்கில் எண்ணெய் இல்லே. விளக்

கின் வெளிச்சம் கொஞ்சம் கொஞ்சமாகக் குறைந்து கொண்டே வருகிறது. விளக்கின் மெலிவை இருள் பார்த்துக் கொண்டே இருக்கிறது. விளக்கு அணைந்தவுடன் இருள் எங்கும் பரவி விடுகிறது. அதுபோலத் தலைவன் எப்பொழுது பிரிவான் என்று பசலை பார்த்துக்கொண்டே இருக்கிறது. பிரிந்தவுடன் அவளைப் பற்றிக் கொள்கிறது.

"விளக்கற்றம் பார்க்கும் இருளே போல் கொண்கன்
முயக்கற்றம் பார்க்கும் பசப்பு."

தலைவி தலைவனைத் தழுவிக் கிடந்தாள். பக்கத்தில் சிறிது அகன்றாள். அவ்வளவின் பசலை அவளைப் பற்றிக்கொண்டது.

"புல்லிக்கிடந்தேன் புடைபெயர்ந்தேன் அவ்வளவில்
அள்ளிக் கொள்வற்றே பசப்பு."

பாசியும் பாசமும் :

பாசி படிந்த தண்ணீர் குட்டம். ஒரு சிறுவன் கல்லினைத் தண்ணீரில் எறிந்து கொண்டிருந்தான். கல்பட்டவுடன் பாசி நீங்கியது. கல்மூழ்கியது. மீண்டும் பாசி பரவியது. சிறுவனுக்கு வேடிக்கையாக இருந்தது. மீண்டும் கல்லை எறிந்தான். பாசி விலகியது. கல் மூழ்கியவுடன் பாசி மீண்டும் மூடிக்கொண்டது. இக்காட்சியைக் கண்டார் அருணந்தி சிவாசாரியார். பாசங்களுக்கும் உயிர்களுக்கும் உள்ள தொடர்பை எண்ணினார். பாசமாகிய பாசி நம்மைப்பற்றிக் கொள்ளுகிறது. இந்தப் பாசியை நீக்க என்ன செய்யலாம் என்று சிந்தித்தார். சிறுவன் கல்லை எறிகிறான். பாசி நீங்குகிறது. நாம் என்ன செய்யலாம்? ஞான மாகிய கல்லை எறிந்தால் குற்றம் பொருந்திய மலமாயை ஆகிய பாசிகள் நீங்கும் அல்லவா? கல்பட்டவுடன் பாசி நீங்குகிறது. அரன் அடியை உணர்ந்தவுடன் பாசம் நீங்குகிறது. அரன் அடியை விட்டவுடன் பாசம் மீண்டும் உயிர்களை ஒட்டிக் கொள்ளுகிறது. பாசிபோன்ற தன்மை வாய்ந்த மலம், மாயை, கன்மங்கள் உயிர் சிவத்தை உணரும் போது நீங்கி விடுகிறது. உணராத சமயம் பார்த்துப் பற்றிக் கொள்ளுகிறது. இந்தப் பாசமாகிய பாசி மீண்டும் சேராதிருக்க இறைவன் திருவடிக் கீழ் நீங்காது நிற்கின்ற முத்திப்பேறு பெற வேண்டும் என்கிறார். (தொடர்ச்சி 733-ம் பக்கம் பார்க்க)

# மன்றில் ஒரு வழக்கு

வித்துவான்: திருமதி. சு. விஜயசரஸ்வதி அவர்கள்
தமிழாசிரியை, கோபாலபுரம் மகளிர் உயர்பள்ளி, சென்னை.

[மலர் 11-இதழ் 11-ன் தொடர்ச்சி]

### பொய்ச்சமயவாதி

எம் கடவுளும் இல்லை, எங்கட்கு முத்தியுமில்லை என்று சொன்னீர். உம்முடைய கடவுள் யாவர்? அவரை அடையும் முத்தி யாது?

### மாணிக்கவாசகர்

கல்லால் நீழலில் அமர்ந்து அருளி அறவோர்க்கு ஞானோபதேசம் செய்யும் கோலத்தைத் தரிசித்துச் சிவனடியார்கள் பலரும் காணத் திருச்சிற்றம்பலமாகிய இந்தத் திவ்வியப் பொன்னம்பலத்தில் நடனம் செய்யும் பெருமானும், திருநீற்றை அணிந்த குருவும், மங்கையர் பாகனுமாகிய முழுமுதல் கடவுள் பெருமையை எடுத்து மொழிவது அவ்வளவு எளிதாகுமா? ஆனாலும் பொய்ச்சமயம் சார்ந்த உன்னை ஈடேற்ற வேண்டுவதற்காகச் சொல்லுகின்றேன் கேள். தில்லைப்பதியிலே திருப்பொன்னம்பலத்திலே அமர்ந்துள்ள எம்மிறைவன் புகழை எடுத்துரைப்பதற்கு எல்லையுமுண்டோ?

### பொய்ச்சமயவாதி

முதலாவது கல்லால் மரநீழலில் இருந்து உமது இறைவன் அறநூல்களை அருளிச் செய்கின்றான் என்று என் நேரில் கூறினீர். செபமாலையைக் கையில் வைத்துக்கொண்டு தியானிப்பது வேறு எக்கடவுளை நினைந்து என்று சொல்லுவீர்! அன்றியும் நில உலகத்திலுள்ள மனிதர் வணங்கிடத் தில்லைத் தலத்தில் பொதுவில் நின்று ஆடுகிறான் எங்கள் இறைவன் என்று மொழிந்தீர். அங்ஙனம் ஆடுவது என்பது பிறர் பார்ப்பதற்கும் கேட்பதற்கும் அல்லவா? தம் இச்சைப்படி எங்கேயாவது யாரும் ஆடுவதில்லையே! அவ்விறைவன் மெய்முற்றும்

நீறணிபவன் என்று மேன்மையோடுஞ் சொன்னீர். உலகத்தி லுள்ள நறுமணப் பொருள்களுள் தூய்மையுடையதென்றோ தன் உடலின் மேலே நீற்றையணிந்தான்? அவன் மங்கை பாகன் என்றுஞ் சொன்னீர். இப்பூமியின்கண் பாதியுடலைப் பெண் ணுக்கீந்தான் இறைவன் என்றும், துறவியாயிருந்து அற முரைக்கின்றான் என்றுங் கூறியது இறைவன் செய்யவேண் டிய தவந்தானோ?

மாணிக்கவாசகர்

"செபமாலையோடு எம்பெருமான் இருத்தலானது உலகத்தி லுள்ள அடியார்களும் இவ்வாறு இருந்து தவம் செய்ய வேண்டும் என்ற நோக்கத்தோடு என்பதை நீ அறியாய். எங்கள் கடவுள் கையிலே செபமாலை வைத்திருத்தல் பிறர் பழகு தற்குரிய இயல்போடும் ஆசிரியர்கள் தங்கள் கையில் கைவாள் வைத்திருத்தல் போலாகும். எம்பெருமான் தில்லைப் பொன்னம் பலத்தில் நடனமாடுவது என்ன கருத்தென்று நீ கேட்பாயாயின் விறகினிடத்துத் தீ கலந்திருப்பது போல உடலினிடத்தில் உயிர் போல் தானும் கலந்திருந்து கொண்டு எல்லா உயிர்களையும் ஆட்டுவிக்கும் நட்டுவனாக நின்று கூத்தாடுகிறவனே தில்லைப் பதியன் என்று நீ அறியாய் போலும். எங்கள் இறைவன் திருநீற்றினைத் திருவுருவெங்கும் பூசுவான் என்பதற்கு என்ன என்னவோ பிதற்றுகின்றாய்! அக்கருத்து உயிர்களிடத்துக் காணப்பெறும் பிறவிப்பிணியை நீக்குதலேயாகும். அது உலகத்தில் கொடிய பிணியில் வருந்தும் குழந்தைகளுக்காகத் தாய்மார் மருந்துண்பது போலாகும் என்று அறிவாயாக. இடப் பாகத்தில் உமையை வைத்திருத்தல் இறைவனுக்குப் பழு தென்றாய். இது உலகம் முழுவதும் போகங்களை அனுபவித் தற்கேயன்றி வேறில்லையாகும். போகிகட்குப் போகியாயும், யோகிகட்கு யோகியாயும் இருந்து அன்பர் கருதியபடியே அருள் செய்துக் கொண்டிருப்பான் எங்களுடைய கடவுள். எல்லா உயிர்களிடத்தும் பூவில் மணம் போல் கலந்திருப்பா னென்று கண்டறிய மாட்டாய். இத்தில்லைப் பதியில் கனக சபையின்கண் நின்று நடனம் புரியும் கூத்தப் பெருமானே முழு முதற்கடவுள். அவனே பரம்பொருள். அவனே சிவயோகி. அவனே அருவமாகிய சோதி வடிவினன் பல வடிவம் எடுப்ப

வனும் அவனே. நிறைந்த பொருளும் அவனே. பேரானந்தப் பெருவாழ்வுக் கடலாயிருப்பவனும் அவனே. முழுமுதலாகிய அப்பொருளை அடி முடி காண்பர் ஒருவருமில்லை.

"எழில்பெறும் இமயத் தியல்புடை அம்பொற்
பொலிதரு புலியூர்ப் பொதுவினில் நடநவில்
கனிதரு செவ்வாய் உமையொடு காளிக்
கருளிய திருமுகத் தழகுறு சிறுநகை
இறைவன் ஈண்டிய அடியவ ரோடும்
பொலிதரு புலியூர்ப் புக்கினி தருளினன்
ஒலிதரு கைலை உயர்கிழ வோனே". — திருவாசகம்.

வழக்கின் முடிவு என்ன? கொள்கையும் செயலும் வேறு பட்டால் தோல்விதானே. எந்த நாட்டினரும் ஏற்றுக்கொள்ளும் முடிவுதானே. சைவம் வென்றது, (பொய்ச்) சமயம் தோற்றது என்பது வரலாறு.

---

(முன் 730-ம் பக்கத் தொடர்ச்சி)

"பாசிபடு குட்டத்திற் கல்லினை விட்டெறியப்
படும்பொழுது நீங்கி அதுவிடும் பொழுதிற்பரக்கும்
மாசுபடு மலமாயை அருங்கன்மம் அனைத்தும்
அரனடியை உணரும் போதகலும்பின் அணுகும்
நேசமொடுந் திருவடிக்கீழ் நீங்காதே தூங்கும்
நினைவுடை யோர் நின்றிடுவர் நிலையதுவே யாகி
ஆசையொடும் அங்குமிங்குமாகி அலமருவோர்
அரும்பாச மறுக்கும்வகை அருளின் வழியுரைப்பாம்."
(சித்தி-சுப-291)

பாசியைக் கொண்டு பசலையின் தன்மையை உணர்த்திய பரணருக்கும், பாசத்தின் தன்மையை உணர்த்திய அருணந்தி சிவாசாரியாருக்கும் நாம் செய்யும் நன்றி அவர்கள் கூறிய கருத்துக்களை மனத்தில் கொண்டு மலமாயை நீக்கி பேரின்ப மாகிய சித்தாந்த முத்தி இன்பத்தைப் பெறுவதேயாகும்.

"உள்ள மலநீங்கி யோங்கு சிவானந்த
வெள்ளந் திளைத்ததுவாய் மேவுதலே — கள்ளவிழ்பூங்
கொத்தார் விரிசடையார் கூறு சிவாகமத்திற்
சித்தாந்த முத்தியெனத் தேறு." (முத்திநிச்சயம்.)

# இது நற்செவ்வி

வண்ணை. திரு. க. சிவலிங்கம் அவர்கள்,
எண். 7. மேற்கு கல்மண்டபம் ரோடு, இராயபுரம், சென்னை-13.

ஆமுறுங்கடல்—கொந்தளிக்கும் அலை—கோரசப்தமிடும் பெரும் புயல் இப்படிப்பல இடிமுழக்கங்களை யெழுப்பிய அந்த நிலக்கடலின் வேகத்தையும், வெகுண்டிடும் தன்மையையுங் கண்டு அஞ்சாமல் நெஞ்சில் உரம் பெற்று, கொட்டு மழை பெய்தாலும் கொடிய வெய்யில் காய்ந்தாலும் அயரா உழைப்பிலீடுபட்டு, அலைகடலை நீந்திடும் ஆற்றல் வாய்ந்த மக்கள் நெய்தல் நிலத்தில் வசித்து வந்தனர் என்று சங்ககால நூல்கள் பல சான்று கூறுகின்றன.

இவர்கள் கடற்கரையிலுள்ள மணல் மேட்டில் தாமிருக்க இல்லம் அமைத்துக்கொண்டு வாழ்ந்தமையால், இம்மக்களுக்குப் பரதவரெனப் பெயர் வழங்கலாயிற்று. இவர்கள் இருக்கும் ஊர் சிறு நல்லூரென்றும், சிறுகுடியென்றும் வழங்கப்படுகின்றது. கடற்கரையும் கடற்கரைச் சோலையையும் கானலென்பர். உப்பளங்கரையிலிருக்கும்; அவை, 'உப்பு விளை கழனி' எனப்படும்.

இந்நிலத்தின்கண் அமையப்பெற்ற கானற்சோலையிலிருக்குந் தாழம்பூவினைக் கண்டு விரைந்து பறந்து வந்தவண்டுகள், அத்தாழம்பூவின் இதழ்களை இசையரங்காக்கி, தத்தம் தகுதிக்கேற்ப மதுர கீதம் பாடின. அவைகள் எழுப்பிடும் இசையைக் கேட்ட தாழம்பூக்கள் அவ்விசையின் மென்மைக்கும் மேன்மைக்குமுள்ள நுண்மையான பொருள் தெரிந்து, தவழும் தென்றலோடு சேர்ந்து தாமும் தலையாட்டி ரசித்ததின் பயனுக, அவ்வண்டுகளின் கனிவு மிக்க கானத்துக்கு கைம்மாறு செய்வதின் அறிகுறியாய்த் தம்மிடமுள்ள மகரந்தப் பொடிகளை மனமுவந்து அவை

களுக்கு விருந்தாகப் படைத்தன. அவ்விருந்திலேயுள்ள விநோதத்தைக் கண்ணுற்ற வண்டுகள் ஒக்கலும் உவப்ப ஒருமித்து உண்டன.

இத்துணை மாட்சிமையைத் தனது மடியிலேந்தியிருக்கும் அந்த இயற்கை அன்னையின் இயல்பை நுண்மாண் நுழை புலமுடைய அறிவின் மேதைகள் நேரிற் கண்டிருந்தால், அவர்களின் கற்பனைக் கண்கள் திறக்கப்பட்டு கற்றோர் காமுறும் காவியமாகவும் கல்லாதார் சுவைத்திடும் ஓவியமாகவும் உருவாக்கி ஒளிபெற்று விளங்கிடச் செய்திருப்பர் என்பதிற் சிறிதேனும் ஐயமில்லை.

பொலிவும் புகழும் புடை சூழ்ந்து காணப்படும் அந்த இயற்கையின் செயல்களை அறிந்து கொள்ளும் அறிவுநுட்பம் பெற்றிடும் அளவுக்கு அங்கே இருவுருவங்கள் மணல் மேட்டைத் தமக்குற்ற ஆசனமாக்கிக் கொண்டு அமர்ந்திருந்தன.

அந்த இனியகாட்சிகள் என்றும் மறவா நிகழ்ச்சியாகத் தோன்றவே, அவ்வுருவங்களின் உள்ளத்தைத் துளைத்து – உணர்ச்சியோடுறைந்து எண்ணத்தோடெழுந்து – எட்டாத ஆராய்ச்சிக்கு இழுத்துச் சென்று இறுதியாக இன்பியலைச் சுட்டிக் காட்டின.

கிட்டுதற்கரிய அவ்வின்பியலைவிட்டு விலகாமல் மதி மயங்கிட்ட அவ்வுருவங்கள் கானமயிலின் நடனத்தைக் கண்டு, தாமும் அதுவாகப் பாவிக்கும் வான்கோழியின் கருத்துக் கொப்பாக, தத்தமது இதயத்தோடு இணைந்திட்ட கேண்மையைக் கீழ் நிலைக்குச் செல்லவொட்டாமல் கீர்த்தியடைய விழைந்து, செய்வன திருந்தச்செய்யவும், சிறுமையைக் களையவும் ஐயத்தையகற்றி, அன்பைப் பெருக்கவும், ஆக்கத்தை வளர்க்க ஊக்கத்தை மிகைப்படுத்தவும், எண்ணிய எண்ணங்களைத் திண்ணியதாக்க எளிதான வழிவகைகள் யாதென ஆராயவும், இப்படியாக இன்னும் பிறவற்றை நினைத்து தாம் பேணி வருங்காதல் வாழ்வில் பேரின்பங்காண முயன்று மூச்சோடும் பேச்சோடும் ஊடி முடிவெடுத்து முகமலர்ச்சியிலாழ்ந்தன.

அவைகளிடம் பொங்கி வழியும் பூரிப்பைக் கண்ட கதிரவன் ,அளவுக்கு மிஞ்சினல் அமிர்தமும் நஞ்சாகும்' என்று சொல்லா

மல் சொல்வதைபோல், தனது வடிவத்தையும் வண்ணத்தையுங் குறைத்து இருளுக்கு இடங்கொடுத்துவிட்டு இருக்குமிடந் தெரியாமல் எங்கேயோ சென்றுவிட்டான். அக்கதிரவனின் கூற்றைக் குறிப்பாலுணர்ந்திட்ட அவ்வுருவங்கள் வரைமீறியெழுந்திட்ட மகிழ்வுக்கு முறையோடு முற்றுப்புள்ளி வைத்துவிட்டு ஒன்றை ஒன்று நோக்கி விடைபெற்றுத் தத்தம் வீடு நோக்கிச் சென்றன.

கருவினுருவாகிய கங்குல் வானமண்டலத்தின் எல்லையை யெட்டிப் பிடிக்குமளவு வளர்ந்து தனது நிறத்தின் தன்மையை எங்கும் நிலை நிறுத்திக்காட்டியது அதன் அவசரச் செயலையும் அயரா உழைப்பையுங் கண்ட விண்மீன்கள் அங்குமிங்குமாகச் சிதறிக் கைகொட்டி வரவேற்றுக் கண் சிமிட்டிச் சிரித்தன. இதனைக்கண்ணுற்ற தலைவிக்கு அளவிடமுடியாத அச்சமெழுந்து அவள் உள்ளத்தைத்துரத்தவே காரினும் விரைந்து தனது கடிமனை புகுந்தாள்.

வழக்கம்போல், இருளடைந்த நேரத்திலே கட்டுமரத்தை நம்பி கண் காணுத்தூரம் கடலைக் கடந்து மீனைப்பிடிக்கச் சென்ற அத்தலைவியின் தந்தை இன்று எதிர்பாராவிதமாகச் சுருமீனால் தாக்கப்பட்டு அதிவிரைவில் வீடு வந்து முக்கல் முனுகலுடன் படுத்திருப்பதைக் கண்ட அத்தலைவி விதிர்விதிர்ப்புக் கொண்டு தந்தையுடன் தானும் துயருற்ருள். அத்தருணம் உப்பைவிற்று வெண்ணெல்லை வாங்கி வரும் பொருட்டு உப்புவிளை கழனிக்குச் சென்ற அத்தலைவியின் தாயும் ஆங்கு வந்து தங்கணவர் படுந்துயரறிந்து தாங்கொணு நிலையில் அத்தாயும் வருந்தலானுள். அன்றையிலிருந்து அத்தலைவியின் தந்தை சுரு எரிந்த புண் ஆறும்வரை கடலுக்குச் சென்று மீன் வேட்டையாடுவதை நிறுத்திவிட்டார். அவருக்கு வேண்டியவற்றைச் செய்யத்தாயும் உப்புவிளை கழனிக்குப் போக முடியாமல் விட்டிலிருந்தாள்.

தந்தையும் தாயும் வீட்டைவிட்டு வெளியே செல்லாமலிருப்பதை யொட்டி, தலைவி தங் காதலனைக்கண்டு களிக்க முடியாத கடுந்தண்டனைக் குள்ளாகவே, அவள் உள்ளத்தில் ஊசலாடிய காதல் நேரத்துக்கு நேரம் அவள் நினைப்பையும் நிலையையும் மாறி மாறிச் சுழல வைத்தன. இதையே வள்ளுவர் பாணியிற் கூறவேண்டுமானுல்,

"காலைய ரும்பிப் பகலெல்லாம் போதாகி
மாலை மலரும் இந்நோய்"

என்றுதான் செப்ப வேண்டும். அதாவது காமநோய் என்னும் மலரானது காலைப்பொழுதில் அரும்பி, பகற்பொழுதில் பேரரும் பாக முதிர்ந்து, மாலைப்பொழுதில் மலருகின்றது. அதைப் போல், அவளின் அகத்திலே குடிகொண்டிருக்குங் காதல், காலைக்கொரு குணமும் - பகலுக்கொரு பண்பும் - மாலைக்கொரு மனமருட்சி செய்யும் நிலைமைக்குக் கொண்டு வந்து நிறுத்தி அவளைத் துன்பத்திலாழ்த்தியது.

இதன் பிடியிலிருந்து விடுபடத் தன்தந்தை நோய் என்று தீருமோவெனப் பிணியால் பீடிக்கப்பட்ட தந்தையைக் காட்டிலும், அத்தலைவி பெரிதும் அக்கறை கொண்டவளாகக் காணப் பட்டாள்.

இப்படியாகக் காலமும் வெகுவிரைவாகவோடி, அவள் தந்தையின் உடல் நிலையைச் சரிபடுத்தி, அவள் கொண்டுள்ள கருத்துக்கு ஒத்துழைப்புத் தந்தது. பிறகு, அவள் தந்தையும் தாயும் வழக்கப்படி, தத்தம் தொழிலினைக் குறித்து வீட்டை விட்டு வெளியேறிச் சென்றார்கள். இந்த நல்ல சமயத்தை எதிர்பார்த்திருந்த அவளும் தன் காதலனைக் காணப் பேரவாக் கொள்ளலானாள்.

அனுதினமுங்கண்டு ஆனந்தங் கொண்டு அத்தலைவியிடம் அன்போடு பிணைந்திட்டதலைவன்; நாள்தவறாமல் கானற் சோலைக்கு வந்து, தங்காதலியைக் காணமுடியாத ஏமாற்றத் தால் ஏங்கி, அவள் தன்னை வந்து காணாததின் காரணம் யாதெனத்தெரிய, இன்று அவள் இல்லத்தை நோக்கி விரைந்து வேலிப்புறத்திற் போய் நின்றான்.

அவன் வேலிப்புறத்தில் வந்து நிற்பதைக் கண்ட தலைவி, காணாதவளைப் போல், தான் இதுவரை அவனைச் சந்திக்க முடியாத சங்கடத்தை அவன் அறியும்படி, தோழியிடம் தூது விடுப் பதைப்போல் கூறலானாள்.

"தோழி! எந்தந்தைக்கு வலிமையையுடைய சுறாமீன் விசியதால் உண்டான புண் ஆறி, மீண்டும் மீன் வேட்டை

யாடும் பொருட்டு, நீல நிறத்தையுடைய கடலினிடத்தே புகுந் தனர். எந்தாயும் உப்பைவிற்று வெண்ணெல்லை வாங்கி வரும் பொருட்டு உப்புவிளை கழனிக்குச் சென்றனள். இவர்கள் இரு வரும் வீட்டிலிருந்ததை யொட்டி இதுநாள் வரை நான் என் தலைவரைச் சந்திக்க முடியாதவளாகி விட்டேன். ஆதலால் குளிர்ச்சி பொருந்திய பெரிய பரப்பாகி கடற்கரையையுடைய தலைவன் இப்பொழுது இங்கே வந்தால் தலைவியை எளிதிற் கண்டு பெறுவதற்குரியன் என்றும் இத்தூது மொழியை, நெடுந்தூரமாகிய வழியைக் கடந்து போய் வருந்தாமல், என் னுள்ளக்கிடக்கையைக் கூறினல் மிகநல்லதாகும். இது நற் செவ்வி. இதை நழுவவிடாமல் பயன்படுத்திக் கொள்வதே என் விருப்பம்," எனக் கூறலானுள். இப்படிப்பட்ட சிந்தை குளிரும் செய்தியைக் கல்லாடனுர் என்னும் புலவர் மிகக்கனிவுடன் எடுத்து விளக்கியுள்ளார்.

"சேயாறு சென்று துனைபரி யசாவா
துசாவுநர்ப் பெறினே நன்று மற்றில்ல
வயச்சுரு வெறிந்த புண்படணிந் தெந்தையும்
நீனிறப் பெருங்கடல் புக்கனன்யாயும்
உப்பைமாறி வெண்ணெற் றரீஇய
உப்புவிளை கழனிச் சென்றன ளதனுற்
பனியிரும் பரப்பிற் சேர்ப்பற்
கினிவரி னெளிய னென்னுந் தூதே" (உாசூ௰சூ)

பதவுரை:— தோழி, எந்தையும் வயச்சுரு எறிந்த புண் தணிந்து - என் தந்தையும் வலியையுடைய சுருமீன் வீசிய தால் உண்டான புண் ஆறி, நீல்நிறம் பெருங்கடல் புக் கனன் - மீண்டும் வேட்டையாடும் பொருட்டு, நீல நிறத் தையுடைய பெரிய கடலினிடத்துப் புகுந்தனன், யாயும்- என்தாயும், உப்பைமாறி - உப்பைவிற்று, வெள்நெல்தரீ இய - வெண்ணெல்லை வாங்கிவரும் பொருட்டு, உப்புவிளை கழனி சென்றனள் - அவ்வுப்பு உண்டாகின்ற அளத்திற் குச் சென்றனள்; அதனுல், - பனி இருபரப்பின் சேர்ப்பற்கு - குளிர்ச்சியையுடைய பெரிய பரப்பாகிய கடற்கரையுடைய

(தொடர்ச்சி 746-ம் பக்கம் பார்க்க)

# தேவர் கண்ட திருநாடு

திரு. மது. ச. விமலானந்தம் அவர்கள் எம்., ஏ.,
தமிழ் விரிவுரையாளர்
மன்னர் சரபோசி கல்லூரி, தஞ்சாவூர்.

(மலர்–11, இதழ் 9–ன் தொடர்ச்சி)

தேவர் கண்ட திருநாட்டைக் கண்டோம்; திருநாட்டின் தலைநகரைக் காண வேண்டாமா? நாடு-ஏமாங்கத நாடு; நகர்-இராசமாபுரம்.

### கடிநகரா? கற்பகச் சோலையா?

நகரின் பற்பல பகுதிகளையும் திறம்படக் கூறும் தேவர், அந்நகரினைக் கற்பகச்சோலை என்றே சிறப்பித்து விடுகிறார்:

"தேன்றலைத் துவலை மாலை பைந்துகில் செம்பொன் பூத்து
ஞான்றன வயிர மாலை நகுகதிர் முத்த மாலை
கான்றமிர் தேந்தி நின்ற கற்பகச் சோலை யார்க்கும்
ஈன்றருள் சுரந்த செல்வத்து இராசமா புரம தாமே."
(நகர்வளம்.62)

வேண்டுவார்க்கு வேண்டுவன வெல்லாம் விரும்பிய வண்ணம் நல்கும் திறத்தது கற்பகச்சோலை; அஃதே போன்று தேன்நிறை மலர்மாலை, பைந்துகில், செம்பொன், வயிரமாலை, முத்துமாலை முதலியன பெற்றுப் பலரும் இதனால் பயனுறுமாறு பிறங்கிக் காட்சியளித்ததாம் இராசமாபுரம். அன்றியும் இந்நகரின்கண் வாழ்வார்தம் அருளைக் கண்டே பிறர்க்கும் அருள் பிறந்து இன்பவீட்டினை எய்துவர் என்கிறார். எனவேதான் கடிநகரா? கற்பகச்சோலையா? என வியக்கிறோம் நாமும்.

இனி, நகரினை வலம் வந்து ஆசிரியர் கூறியாங்கு இராசமாபுரம் கடிநகரா? கற்பகச் சோலையா எனத் தெளிவோம் வாருங்கள்:

எடுத்த எடுப்பிலேயே கம்பரைப் போன்று, தேவரும் பெண்ணின் சூழ்ச்சியில் அகப்படாத முனிவருடைய தவப்பயன் போலே செல்வமோங்கிய நகரின் நிறைவைக் கூறுவாம் என்கிருர்: இதோ பாட்டு.

“ தண்வலைக் காமுகர் என்னும் மாபடுத்து
ஒண்ணிதித் தசைதழீஇ யுடலம் விட்டிடும்
பெண்வலைப் படாதவர் பீடின் ஓங்கிய
அண்ணலங் கடிநகர் அமைதி செப்புவாம். (நகர்வளம்-1)

இதனுல் தொடக்கத்திலேயே இராசமாபுரத்தின் ஏற்றமும் தோற்றமும் இதயத்தில் பதிந்து விடுகிறது.

கா பல சூழ்ந்தும், பொய்கை பல நிறைந்தும், வலிய மதில் உடையதாயும், களம் பல கொண்டதாயும் இருந்ததாம் இராசமா புரம்!

### கண் சிறைப்படு நிழற் கா:

கண்ணைக் கவரும் கா அந்நகரைச் சூழ்ந்து அணி செய்தது. அக்காவினுள் விண்ணுற உயர்ந்த சண்பக மரங்கள் பூத்துக் குலுங்கி நின்றன; பூக்களின் சுமையால் கிளைகள் தாழ்ந்து தளர்ந்து இருந்தன. இந்நிழல் தரு மரங்களின் நிழலை நினைவோர் நெஞ்சம் குளிருமாம், நோக்குவோர் கண்கள் அதனின்று நீங்காவாம். சண்பக மலரைத் தாதுகக் குடைந்து வண்சிறைக் குயில்கள் மயிலோடு மாருகக் கூவி மகிழுமாம்; சிற்சிலபோது மகளிரும் மாருகக் கூவி மயங்குவராம். சண்பகத் தண்மலரின் தேன் துளித்தலாற் கார்காலமெனக் கருதி மயிலொடு மயிலும், வேனிற் காலமாதலான் குயிலொடு குயிலும் அகவியும் கூவியும் அமையுமாம். இத்தகைய இனிய கண்சிறைப்படு நிழற் கா பல சூழ்ந்த நகரின் நிறைவே நிறைவு.

### பூம்படாம் போர்த்த பொய்கை:

இராசமாபுரத்தில் இயற்கையிலேயே அமைந்த பொய்கைகள் பலவுள. நகரமாந்தர் நீராடும் நீர்நிலைகளாம் இவை. நீராடி நீங்கியபின், மாந்தர் ஏந்தி வந்த கைபுனை சாந்தமும், கடிசெய் மாலையும், மெய்புனை சுண்ணமும், புகையும் பிறவும் பொய்கையை மறைத்துவிடுமாம்! அஃது எங்ஙனமுளதெனில்,

இயற்கையாய் அமைந்த நாணத்தாலோ, அன்றிப் பிறர் மாசு பட்டதெனும் நாணத்தாலோ அப்பொய்கையாகிய மங்கை பொலிவுடைய பூவாகிய போர்வையால் தன்னைப் போர்த்திக் கொண்டது போன்றுளதாம். இப்படிப்பட்ட பொய்கைகள் ஏராளம் உண்டாம் இராசமாபுரத்தில்.

இந்நகரைச் சுற்றியும் வன்மையான கன்மதில் அமைந் துளது. அம் மதிலுக்கு அண்மையில் யானைக் கூட்டங்களும், யானைகள் போர் செய்தற்குரிய களங்களும் காணப்படுகின்றன. இவ்வெல்லையின் உள்ளே இருப்பதுதான் இராசமாபுரம்.

**அமைப்பும் அழகும் :**

அந்நகர் கடைநகர், இடைநகர், உள்நகர் என்ற மூன்று பெரும் பகுதிகளாக அமைந்து, ஒவ்வொரு பகுதியிலும் உட் பிரிவுகள் பல கொண்டுளது. இதனால் இராசமாபுரத்தின் அமைப்பழகும் அமைந்த ஒழுங்கும் அறியலாம்; நகரின் அமைப் பும் அழகுமே அந்நகர மாந்தர் தம் ஒழுங்கையும் உள்ளத்தை யும் தெள்ளிதின் உணர்த்துவதாகும். அகத்திற்குத் தகத்தானே புறமும் அமையும்!

**'கடைநகரில்' களிறுகள் :**

இக் கடை நகரில் யானையின் மருப்பைக் கூரியதாக்கி, வைர வேலைப்பாடமைந்த பூணிடுவார் வாழும் வீதிகள் இருந்தன; அஃதோடன்றித் தேரேறுமிடமும், குதிரையேறும் இடமும், கேடகத்தோடு வாட்டொழில் செய்யுமிடமும், விற்றொழில் பயிலு மிடமும் அமைந்துள்ளன.

**'இடைநகரில்' இந்திரவில் !**

இக்கடை நகர்க்கும் உள் நகர்க்கும் இடையே இருப்பது இடைநகர். இந்நகர் வீதியில் இந்திரவில் கிடக்கிறதாம்! எப்படி ? சிந்துரப் பொடிகளையும், செம்பொற் சுண்ணத்தையும் சந்தனத்தையும் பனிநீரில் கலந்து மட்டத் துருத்தியாலும் நெடுந் துருத்தியாலும் இராசமாபுரத்து இளமகளிர் சிதறுவராம்; இன்னணம் சிதறிய சிந்துரப் பொடியும் பிறவும் எங்கும் படிந்து பன்னிற வண்ணங்களில் காட்சியளிக்கும்–இக்காட்சியைத் தான் இந்திரவில் கிடந்ததாகச் சித்தரிக்கின்றார் சிந்தாமணியாசிரியர்.

### மயிலும் மணிக்குடமும் :

பாத்தரும் பசும் பொன்னுலாய பன்மாடங்கள் இந்நகரில் பலவுள. அம்மாடங்களின் உச்சியில் நீல மணிக் குடங்கள் நிறுத்தப் பெற்றுள்ளன. பூத்த வேங்கை மரத்தின் உச்சிமீது, மேகத்தை நினைந்து மகிழ்ந்து உவந்திருக்கும் மயில் கூட்டங்கள் போல, பொன் மாடங்கள் மீது நீலமணிக் குடங்கள் இருந்து எழிலுடன் விளங்குகின்றனவாம். அத்தகைய அழகிய மாடங்கள் அந்நகரில் உள்ளன !

### சிறுதேரும் போதல் செய்யாச் செல்வம் !

இந்நகரின் செல்வச் சிறப்பைச் சிந்தாமணியார் ஒரே பாட்டில் உளந்தொடுமாறு உணர்த்திய பாங்கு உணரத்தக்கது:

" பொற்சிறு தேர்மிசைப் பைம்பொற் போதகம்
நற்சிறுர் ஊர்தலின் நங்கை மார்விரீஇ
உற்றவர் கோழிமேல் எறிந்த ஒண்குழை
மற்றுஅத்தேர் உருள்கொடா வளமை சான்றவே. "
(நகர்வளம்-11)

நங்கைமார்கள் நெல்லை உலர்த்தி நிற்கின்றார்கள் ; காத்து நிற்ப தறியாமலோ அன்றி அறிந்தும் உண்ணும் வேட்கையாலோ கானக்கோழி நெல்லை நாடி வருகிறது. அக்கோழியை வெருட்ட தம் காதணியைக் கழற்றி அதன்மீது வீசுகின்றனர்; எறியப் பட்ட அணிகலன் எங்கும் சிதறி'எடுப்பாரிலாமல்'கிடக்கின்றன! சிறுவர்கள் பொன்னுலாய சிறுதேரினை உருட்டிக் கொண்டு செல்கின்றனர்; வீதி தோறும் விரவிக்கிடக்கும் குழைகள் இத் தேரைப் போகவொட்டாது தடை செய்கின்றனவாம். இங்ஙனம் தேரைப் போதல் கொடாத செல்வம் நிறைந்த நகராம் இந்நகர். இவண், இதே கருத்து,

" நேரிழை மகளிர் உணங்குணக் கவரும்
கோழி யெறிந்த கொடுங்காற் கனங்குழை
பொற்காற் புதல்வர் புரவியின் றுருட்டும்
முக்காற் சிறுதேர் முன்வழி விலக்கும்." (22-26)

எனப் பட்டினப்பாலையில் பயின்றுள்ளமை நினைந்து மகிழத் தக்கது.

### மண்ணகமா ? விண்ணகமா ?

செல்வம் கூறியாயிற்று, சிற்றின்பம் கூறவேண்டவா ? செல்வ வளம் நிறைந்த நகரில் இன்பத்திற்குக் குறைவேது ? இடைநகர் மாந்தர் அனைவரும் இன்பம் நுகரும் திறமே திறம் ! அத்திறம் வருமாறு :

" மாலையும் பசும்பொனு(ம்) மயங்கி வார்கணைக்
கோலெயுங் குனிசிலை நுதலி னாரொடு
வேலியல் ஆடவர் விரவி விண்ணவர்
ஆலயம் இதுவென வையஞ் செய்யுமே." (நகர் வளம்-12)

மகளிர் நுதலுக்கு வில்லை உவமிப்பர். கூரிய அம்புகளை எய்யும் வில்லையொத்த வளைந்த நுதலையுடைய நங்கையர் அந்நகரில் உளர். இவ்வேற்படை வீரர்கள், இந்நங்கையரின் நெற்றியாம் வில்லின் ஆற்றலுக்கு ஆற்றாது மருவுகின்றனராம். மருவியஞான்று இருவர் மாலையும் பூணும் ஒன்றோடொன்று மயங்கிக் கலந்தனவாம். எனவேதான் சொல்லொணா இன்பம் கண்டு மகிழும் திறத்தாலே இம்மண்ணகம் (இடைநகர்) விண்ணகமோ எனவியக்கும் வண்ணம் விளங்கியதாகத் தீட்டுகின்றார் தேவர்.

### எள் விழ இடமில்லை !

இவ்வண்ணம் செல்வச் செருக்கும், சிற்றின்பப் பெருக்கும் மிக்க இந்நகரின் கண்ணே மக்கள் மிகுதியாக உறைகின்றனராம். பழமரத்தை நாடாப் பறவைகள் உளவோ ? அது போல் செல்வம் நிறை செழு நகரை நாடா மக்கள் உளரோ? எள் போட்டால் எள் விழா வகையில் அத்துணை நெருக்கமாக பதினெட்டு மொழி பேசும் பல்வகை மக்கள் நிறைந்திருந்தனராம் இந்நகரில் :

" இட்டவெண் ணிலப்படா வகையின் ஈண்டிய
முட்டிலா மூவறு பாடை மாக்களாற்
புட்பயில் பழுமரப் பொலிவிற் றாகிய
மட்டிலா வளநகர் வண்ண மின்னதே." (நகர்வளம்-15)

### அகழியின் அழகும் அமைதியும்:

அடுத்து கொங்கலர் தாமரைக் கிடங்கினைக் கிளத்துகின்றார்: அன்னப் பறவைகள் தங்கள் குஞ்சுகளுடன் அகழியிலே அங்கு

மிங்குமாய் அழகாக நீந்துகின்றன. பைங்கிளிகளை முன் கை களிலே ஏந்தி நிற்கும் நங்கையர் அகழியில் திரிதரும் இவ்வன் னக் குஞ்சுகளைக் கிளிகளுக்கு எண்ணிக் காட்டுகின்றனர். அவ் வகழியின் கண்ணுள்ள சுருவினமும் முதலையும் கரை நடக்கும் அப்புட்களைப் பெருவாய் உள்ளே திரிதலான், அதற்கஞ்சி விசை யாய்ப் பாயும் இருமீன்களின் உழக்குதலினுல் ஈட்டமருத புள் ளினம் எழுந்தரற்றும். அகழியில் இயங்கும் ஓர் அன்னத்தின் காட்சியை அழகுபட மொழிந்துள்ளார் ஆசிரியர் :

“சிறையனப் பெடையினேடு ஊடிச் சேவல்போய்
அறுபத வண்டினம் ஆர்ப்பத் தாமரை
உறைவது, குழுவினின் நீங்கி யோகொடு
கறையற முயல்வதோர் கடவுள் ஒத்ததே (நகர் வளம்-18)

ஓர் அன்னம் தன் பெடையோடு ஊடி, அதனை நீத்து, செந்தா மரை மலரைச் சார்ந்து அதன்மேல் தனித்திருந்தது; தாமரை மலரில் திகழ்ந்த வண்டுகள் ஆர்த்து எழுந்தன. அன்னம் வெண் ணிறமானது; தாமரையோ செந்நிறமானது. வெண்ணிற அன்னம் செந்நிறத் தாமரையில் தனித்திருந்த திறம், சுற்றத்தை விட்டு விலகி, காமம், வெகுளி, மயக்கம் ஆகிய மும் மலங் களின் கட்டு அறுவான் வேண்டி, தீயிடை நின்றுதவஞ் செய்யும் தவமுனிவரின் திறத்தை ஒத்ததென்கிருர் ஆசிரியர்.

இவ்வகழியைப் பரத்தையாகவும், குலமகளாகவும், கன்னியா கவும் காட்டும் காப்பிய ஆசிரியர் திறம் வியந்து செயல் மறந்து பாராட்டற்பாலது. அகப்பட்டவரைக் கரையேற்ருமற் கோறலிற் பரத்தையையும்; அதுவொழிய மலர்ந்த பூவினுல் மணமாகிய குலமகளையும்; காவலாற் கன்னியையும் இவ்வகழி ஒத்துளது என்கிருர் இதோ கவிதை :

“பட்டவர்த் தப்பலிற் பரவை யேந்தல்குல்
அட்டொளி யரத்தவாய்க் கணிகை யல்லது
மட்டுடை மணமகன் மலர்ந்த போதினுற்
கட்டுடைக் காவலிற் காமர் கன்னியே.” (நகர் வளம்-20)

தன்னை வந்தடையும் எவரையும் அழித் தொழிக்கும் இயல்பினள் பரத்தை, அதே போல தன்கண் அகப்புட்டவரை ஆழ்த்திக்

கொல்லும் தன்மையது அகழி; மணமான குலமகள் அழகுடன் திகழ்வாள், தன்மாட்டு மலரும் மலர்களினுல் மாண்புடன் விளங்குவது அகழி; கற்பைத் தனக்குக் காவலாகக்கொள்வாள் கன்னி, போர்வீரர்களின் காவலேயுடையது அகழி. எப்படி ஒப்புமை ?

## சேயுயர் மதிலின் சிறப்பு :

அடுத்து, சேயுயர் மதில்வகை செப்புகின்ருர் சிந்தாமணி யாசிரியர் : பகைவர்கள் அகழியைக் கடந்து மதிலேயும் கடக்க எண்ணுவாராயின் அவர்களைத் தடுத்து நிறுத்த பலவாய பொறிகள் மதிலின்கண் அமைக்கப்பட்டிருந்தன. நூறுபேரை ஒரே சமயத்தில் ஒரு சேரக் கொல்லும் 'நூற்றுவரைக் கொல்லி,' தள்ளி அடிக்கும் 'நூக்கி எறியும்'; பகைவர் மேலே விடும் பொறியாம் 'விடுகுதிரை,' தானே தொடர்ந்து சென்று கொல்லும் 'தொடர் வாளும்,' 'பேய்ப்பொறி,' 'களிறுப் பொறி' பகைவர்களை அப்படியே விழுங்கும் 'பாம்புப் பொறி' தானே சென்று மாற்ருரைக் கட்டும் 'சங்கிலிப் பொறி,' 'விற்பொறி,' வந்தோர் மேல் கற்களை வீசும் 'கற்பொறி,' பகைவர் தலேயைத் திருகித் தனியே எடுக்க வல்ல 'நெருக்கு மரம்,' 'தீப்பொறி' போன்றனவும்; யாங்கும் திரிந்து செம்புருகின நீரை உமிழும் 'செம்புருகு, இரும்புருகு, இரும்பு உருண்டைகளை அள்ளிவீசும் 'வெம்புருகு,' வெம்மையான நெய்யை உமிழும் பொறி, அம்புகளேயும், வேல்களையும் உமிழும் பொறிகள். 'பன்றிப் பொறி', 'நாகப் பொறி,' 'குரங்குப் பொறி' 'ஆட்டுக்கிடாய்ப் பொறி', பற்றிய கையை அரிந்து தள்ளும் 'நுண்ணூல்' மரநிலே போன்றனவும் இம்மதிலின் மேல் இருந்து காத்தனவாம். இதுவன்றி எல்லாவற்றிற்கும் மேலாக, மதிலேக் காவல்புரியும் தெய்வமாம் 'மதில் கன்னி' நான்கு வாயில்களிலும் நான்கு முகமாக இருந்து பாதுகாவல் புரிந்தனளாம்.

இறுதியாக உம்பருகம் ஒப்ப உள்நகரின் உயர்வை உரைக்கின்ருர்.

## சேரிச் சிறப்பும் சேடியர் சீர்மையும் :

முதலில் பரத்தையர் சேரியைப் பாங்குறப் பகர்கின்ருர். பவழத்தைப் பழிக்கும் அழகிய செவ்வாயும், விரும்பாதார் உள்ளத்தும் வேட்கையினை விளைவிக்கும் மொழித்திறமும் கொண்ட

தோழியரை ஆடவர்பால் தூதனுப்பிஅவர்களைத் தம்பால் ஈர்க்கும் இயல்புடையவர் இங்குள்ள பரத்தையர். சேரியும் சேரியைச் சார்ந்த இடங்களும் குங்குமத்தால் மெழுகப் பெற்றும், உட்புறம் சந்தனச் சேரால் பூசப்பெற்றும், பூமாலைகள் தொங்கவிடப் பட்டும் இருக்கும்; இல்லின் எழில் மிகு சுவர்கள் தோறும் காமக் குறிப்புப்பட நாடகம் எழுதப்பட்டிருக்கும், மாளிகையினுள்ளே மெல்லிய மலர்கள் தூவிய படுக்கை பொலிந்து தோன்றும். விண்ணவரும் நாடிவந்து சாடி நிற்கச் செய்யும் இச்சேரி என்றால், இதன் ஏற்றமும் தோற்றமும் எடுத்துரைக்கும் தர மாமோ? செம்பொன் ஒன்று முதல் ஆயிரத்தெட்டு கழஞ்சு பொன் ஈருக விலைபேசித் தம்மை வந்தணையும் ஆடவர்க்குத் தம் உடலை விற்பர் பரத்தையர்! ஏனெனில் என்றும் உவர்ப்பிலாத நுகர்ச்சியை யுடையவர்களாம் இவர்கள்! தேவருலகும் இச் சேரிக்கு ஈடாகாதாம்; ஒழியா ஒலிகள் ஓங்கி நிற்றலே காரணமாம் :

"அஞ்சிலம் பொலியோ டல்குற் கலையொலி யணிந்த முன்கைப்
பஞ்சிமெல் விரலிற் பாணி பண்ணொலி பவழச் செவ்வாய்
அஞ்சிநேர்ந் துயிர்க்குந் தேன்சோர் குழலொலி முழவி னோசை
துஞ்சலி லோசை தம்மாற் றுறக்கமு நிகர்க்க லாதே."

(நகர்வளம்-32)

---

(தொடரும்)

---

(முன் 738-ம் பக்கத் தொடர்ச்சி)

தலைவனுக்கு, இனியவரின் எளியள் என்னும் தூது - இப் பொழுது இங்கே வந்தால் தலைவியை எளிதிற்கண்டு அவளைப் பெறுதற்குரியளாவளென்னும் தூது மொழியை, சேய் ஆறு சென்று - நெடுந்தூரமாகிய வழியைக் கடந்து போய், துனைபரி அசாவாது - விரையும் நடையினால் வருந் தாமல், உசாவுநர் பெறின் - கூறி உசாத்துணையாவரைப் பெற்றால், நன்றுமன் - மிக நல்லதாகும்! தில்ல - இஃது என் விருப்பம்.

---

# கோதர்கள் மதமும் வழிபாடும்

வித்துவான், திரு. சோ. வேங்கடாசலம் அவர்கள்
கழக உயர்நிலைப்பள்ளி, சோலூர் மட்டம்
கீழ்க் கோத்தகிரி P. O. (நீலகிரி மாவட்டம்.)

"மன்னு மிமய மலையெங்கள் மலையே
மாநில மீதது போற் பிறிதிலையே."

என்றார் நம் தேசிய கவி. பரந்துபட்ட இந்திய உப கண்டத்தில் நாம் வாழ்கிறோம் என்றென்னும் நிலையில் நாமும் இவ்வாறே பாடி மகிழலாம்.

ஆனால் "வேங்கடம் குமரி தீம்புனற் பௌவம்" என்று வரையறுக்கப்பட்ட எல்லைக்குள் அமைந்த தமிழ்நாட்டின் பெருமையை நோக்கும் பொழுது, இவ்வெல்லைகளுக்குள் அமைந்த மலைகளைப்பற்றி சிந்தியாமலிருக்க முடியாது. தென்றமிழ் நாட்டிலுள்ள மலைகளில் உயர்ந்தது நீலகிரி மலைதான். இம்மலையின் ஒரு சிகரமான "தொட்டபெட்டா" தமிழ் நாட்டின் உயர்ந்த சிகரமாகும்.

இம்மலையில் வாழும் பெரும்பான்மை மக்களாகிய படுகர்கள் மொழியில், "தொட்ட" என்றால் "பெரிய" என்றும், "பெட்டா" என்றால் மலை என்றும் பொருள் கொள்ளக் கிடைக்கிறது. பழஞ் சிறப்பும் பெருமையும், உலக மக்களின் கோடை வாசஸ்தலமாக விளங்கும் இம்மலையின் பெருமையை விரித்துக் கொண்டே சென்றால் அது மற்றொன்று விரித்தலாக முடியும்.

கால்டுவெல் துரைமகனார் தாம் எழுதிய "திராவிட மொழிகளின் ஒப்பிலக்கணம்" என்ற நூலில் தமிழின் கொச்சைக் கிளை மொழிகளில் ஒன்றாய்க் "கோதம்" என்பதனைக் குறிப்பிட்டு அம் மொழி பேசும் மக்கள் கோதர்கள் என்றும், அவர்கள் நீலகிரி மலையில் வாழ்பவர்கள் என்றும் குறிப்பிட்டுள்ளார்,

இக்கோதர்களின் மதம் சைவமே. இவர்கள் பார்வதியை யும் சிவனையுமே கோவில் அமைத்து வழிபடுகிறார்கள். இக் கோதர்கள் கோவில்களையும், வழிபாட்டையும் பற்றியே இங்கெழுதப் புகுகின்றேன்.

**கோவில் :**

கோவில்கள் தமிழ் நாட்டில் சமவெளியில் அமைந்துள்ள கோவில்களைப் போல் திருச்சுற்று, பலிபீடம், கலசம், முதலியன அமைக்கப்பெறாமல் உள்ளன.

கோவில் பார்வதி கோவில் என்றும், சிவன் கோவில் என்றும் இரண்டு பிரிவாக அமைந்துள்ளது. கோவில்களில் கோபுரங்கள் அமைக்கப் பெறவில்லை. சாய்வான கூரையே போடப்பட்டுள்ளது.

கோவிலின் முன்பக்கம் பலி பீடத்திற்குப் பதிலாக கல்தூண் ஒன்று நிறுத்தப் பட்டுள்ளது. அத்தூணில், ரிஷப வாகனமும், தாமரை போன்ற பூக்களும் பொறிக்கப்பட்டிருக்கின்றன.

சிவன் கோவிலின் முன் பகுதியில் வாசலுக்கு மேல் இலிங்க உருவம் பொறிக்கப் பெற்று இருக்கிறது. கருவறையில் எந்த வித உருவங்களும் காணப்படவில்லை. முத்தலைச் சூலம் ஒன்றும் கொல்லன் உலைக்களத்தில் உள்ளதைப்போல் ஒரு மேடையும் கல்லும் அமைந்துள்ளன.

பார்வதி கோவில் என்று அவர்கள் குறிப்பிடும் இடத்தில் மேற்குறித்தவாறே கற்றூணும், முத்தலைச் சூலமும், மேடையும் கல்லும் அமைந்துள்ளன. இதிலும் உருவமில்லை.

சமவெளிகளில் அமைந்துள்ளது போல் இங்கு ஸ்தல விருட்சம் அமைந்துள்ளது. அது "கோலி மரம்" என்று அழைக் கப்படுகிறது. இதையவர்கள் தெய்வ சக்தியுள்ளதாகப் போற்றி வருகிறார்கள்.

இவர்கள் வாரங்களில் திங்கள், சனி இரண்டு நாட்களிலும் கோவில்களில் கூடி வழிபாடு இயற்றுகிறார்கள். வழிபாட்டுக் குரிய பொருள்கள் பாலும், சாம்பிராணியுமே. தேங்காய், பழம் இவை உபயோகிக்கப் படுவதில்லை.

கோவில் வேலையைச் செய்வதற்கு பூசாரி ஒருவர் அமைந்திருக்கிறார். பூசாரிகள் கழுத்தில் ஏழு (7) பட்டைகள் உள்ள உருத்திராட்சம் போன்று வெள்ளியால் செய்து கோக்கப்பட்ட மாலையை அணிந்திருக்கிறார்கள்.

கோவிலுக்கு தனிப்பட்ட நிலமில்லை. சாமை விளையும் போது ஒவ்வொரு வீட்டாரும் ஒரு குளகம் அல்லது இரண்டு குளகம் கொடுக்கிறார்கள். (குளகம்-5 படி) இதுவே கோவிலின் வருமானம். சாமையால் சமைக்கப் பட்ட பிரசாதத்தை பூசாரி பங்கீடு செய்கிறார்.

திருவிழா வருடந்தோறும் ஜனவரி மாதம் முதற் பிறை முதல் கொண்டாடப் படுகிறது. இது 15 நாட்கள் நீடிக்கிறது. இப்பதினைந்து நாட்களில் ஆண், பெண்கள் கூடுவதில்லை. மாமிசம் உண்பதில்லை.

திருவிழாவின் போது கோவிலில் பட்டரை அமைத்து வில், அம்பு இரண்டையும் செய்கிறார்கள். இவைகளை விழாவின் முடிவில் அபிஷேகம் செய்து ஊர்வலமாக எடுத்துச் செல்கிறார்கள்.

பூக்களை மக்கள் சூடுவதால், பூக்கள் எல்லாம் குற்றமுடையன என்று இவர்கள் கருதுகிறார்கள். அதனால் கோவில்களில் இவர்கள் பூக்களை உபயோகிப்பதில்லை.

திருவிழாவின் முடிவில், ஆட்டம், பாட்டு, முதலிய கேளிக்கைகள் நடக்கின்றன.

இவர்களின் பூசாரிகள் கூறும் மந்திரம், பின் வருமாறு அமைந்துள்ளது.

"ஐந்நூறு - அவ்னூர் - தாள்நாடு - தள்நாடு குத்தேவிக்கீன். குளவூர்காரன் ஆடுநூண், தூடுநூண், கணகலேச் சூண் ஏய் கோக்கால், தேர் வில்லங்கூஸ், குசிங்கிஸ்தக்கூஸ் எருக்கச்சியம் குர்ரம், எழினூர் குர்ரம், தட்டிதேவ் தட்டிநட்தம், முட்டிதேவ் - முட்டி நட்தம். கடுதோள் காலேஸி."

என்று தொடர்ந்து செல்கிறது. இதில் ஐந்நூறு என்றால் "தந்தை" என்று பொருள்படுகிறது. இது சிவபெருமானைக்

குறிப்பதாக இருக்கலாம். “அவ்னூர்” என்பது, “தாய்” என்று பொருள்படுகிறது. இது பார்வதியம்மையைக் குறிப்பதாக இருக்கலாம்.

“குளவூர்காரன்” என்பது பூசைக்கு உரியவர் என்று கூறப்படுகிறது.

இவ்வாறு பலநூறு ஆண்டுகளுக்கு முன் தமிழிலிருந்து கிளைத்த “கோதம்” என்னும் மொழியைப் பேசும் கோதர்கள், சைவத்தை இன்றும் கைக் கொண்டு ஒழுகுகிறார்கள்.

இவர்கள் நீலகிரி மலையில், கோத்தகிரியை அடுத்த அகால், கீழ்க்கோத்த கிரியை அடுத்த, கோக்கால், கொல்லிமலை, சோலூர், கூடலூர், குந்தா, இடுஹட்டியை அடுத்த திருச்சகடி என்னும் இடங்களில் வாழ்ந்து வருகிறார்கள்.

---

# Rajah of Karvetnagar Memorial Feeding Charity At Rameswaram

## CAPITAL Rs. 6,000/-

---

This endowment is founded by **His Holiness Sri-la-sri Kasivasi Arulnandi Tambiran Swamigal Avergal**, Kasimutt, Tirupanandal in memory of Rajah of Karvetnagar who made the gift of Padiri village (Padarla) Puttur Taluk (Narayanavanam Taluk) Chittoor District to our predecessor - in - title Srilasri Kasivasi Sadayappa Tambiran Swamigal in the year 1800 A. D. (Salivahana Saka Year 1721 - Rowdri year, Chitra month 5th day after the full moon by a gift deed) for feeding Brahmins at Rameswaram. Now that under the Madras Estates (Abolition and conversion into Ryotwari) Act 1948, Madras Act of XXVI of 1948 - the said village was taken over by Government and interim compensation of Rs. 4,578-88 n. P. in respect of the said village was deposited in the Estates Abolition, Tribunal, Chittoor, and that on a petition put in by His Holiness Kasivasi Arulnandi Tambiran Swamigal avl. Proprietor and Trustee of the village in O. P. No. 20 of 1960 before the Tribunal, Chittoor for the payment of the amount, and the same having been paid to him and received on 19-9-1960 through Advocate, Chittoor, this endowment is made in memory of the said Rajah of Karvetnagar for daily feeding of Brahmins at Ramaswaram styled as "**Rajah of Karvetnagar memorial feeding charity at Rameswaram**" with a capital of Rs. 6,000/-.

2. This endowment consists of Rs. 6,000 (Rs./- Six thousands only) fetching interest at 3% per annum

purchased from out of the compensation amount received from the Government. (3% Conversion Loan of 1946. G. P. Notes Nos. CA. 215984 for Rs. 900/- CA. 215985 for Rs. 900/- CA. 215986 for Rs. 900/-, CA. 215987 for Rs 900/-, CA. 215988 for Rs 900/- CA. 215989 for Rs 900/- CA. 215974 for Rs 600/- Tota Rs. 6000/- The administration of the fund shall vest in the Donor and his successors-in-interest.

3. The annual interest accruing on the capital shall be utilised for the daily feeding of Brahmins and Poor in our Kasimutt Choultry at Rameswaram during the Tamil months of Chitrai, Vaigasi, and Ani, each year, in addition to other daily and special feeding charities.

4. The feeding shall be conducted in accordance with the Thittajaptha prepared by the Donor and his Successors-in-interest which will depend upon the interest realised and the price of commodities then current.

5. This endowment shall not be diverted to any purpose other than that intended by the Donor.

Tirupanandal,
31-10-1960. } (Sd.) *Kasivasi Arulnandi Tambiran*

---

Registered at Tiruvadamarudhur Sub-Registrar's office on 2-11-1960 as No. 70 of 1960 of Book No. 4, volume 49, pages 81 to 83.

## 1136-ம் ஞு புரட்டாசி, ஐப்பசி மாதங்களில்
## கலைக்கோவிலில் வரப்பெற்றுக்கொண்ட புத்தகங்களின் விபரம். (தொடர்ச்சி)

| தொடர் எண் | புத்தகத்தின் பெயர் | ஆசிரியரின் பெயர் |
|---|---|---|
| 8138 | திருக்கொண்டீச்சரத் திருப்பதிகங்கள் | தருமபுர ஆதீன வெளியீடு |
| 8139 | திருப்பழையாறைவடதளித் திருப்பதிகம் | ,, |
| 8140 | திருவிளமர்த்திருப்பதிகம் | ,, |
| 8141–42 | திருப்பள்ளியின் முக்கூடல் திருப்பதிகம் | ,, |
| 8143 | திருவுசாத்தானத் திருப்பதிகம் | ,, |
| 8144 | திருக்கரவீரத் திருப்பதிகம் | ,, |
| 8145 | திருஆவூர்ப் பசுபதீச்சரத்திருப்பதிகம் | ,, |
| 8146 | திருவைகன் மாடக்கோயில் திருப்பதிகம் | ,, |
| 8147 | திருத்தெளிச்சேரித் திருப்பதிகம் | ,, |
| 8148 & 49 | திருக்கோட்டாறு திருப்பதிகங்கள் | ,, |
| 8150 | திருப்பூந்துருத்தித் திருப்பதிகங்கள் | ,, |
| 8151 & 52 | ஸ்ரீ தக்ஷிணாமூர்த்தி திருவருட்பா | ,, |
| 8153 to 56 | சுரம்தீர்க்கும் திருநீலகண்டத் திருப்பதிகம் | ,, |
| 8157 | திருநாகேச்சர திருப்பதிகங்கள் | ,, |
| 8158 | திருஇராமேச்சுரத் திருப்பதிகங்கள் | ,, |
| 8159 | வார வழிபாடு | ,, |
| 8160 | ஆலய வழிபாடு | ,, |
| 8161 & 62 | ஸ்ரீ குருஞானசம்பந்த சுவாமிகள் வரலாறு | ,, |
| 8163 | திருப்பாவை (ஸ்ரீ ஆண்டாள்) | ,, |

| | | |
|---|---|---|
| 8164 | திருவாசகம் - சிவபுராணம் | தருமபுர ஆதீன வெளியீடு |
| 8165 & 66 | அபிஷேகத் திருமுறை | ,, |
| 8167 & 68 | தென்கயிலை வடகயிலைத்திருப்பதிகங்கள் (கருத்துரையுடன்) | ,, |
| 8169 | (இராமேசுவர யாத்திரை) எழுதியவர் வித்துவான் ச. தண்டபாணி தேசிகர் குருபூஜை விழா அணிமலர் | ,, |
| 8170 & 71 | திருச்செந்தூர்த் திருப்புகழ் (உரையுடன்) [13-6-52] | ,, |
| 8172 | திருக்குறுக்கைத் தலவரலாறு | ,, |
| 8173 | ஞான சாத்திரங்கள் | ,, |
| 8174 & 75 | கிளி விடுதூது | ,, |
| 8176 | திருக்குறுக்கைத் திருப்பதிகக் கல்வெட்டுக்கள் | ,, |
| 8177 | புள்ளிருக்கு வேளூர்த் திருப்பதிகக் கல்வெட்டுக்கள் | ,, |
| 8178 | பெருமணம் | ,, |
| 8179 | முருகக்கடவுள் | ,, |
| 8180 | தருமையாதீனம் (வரலாற்றுச் சுருக்க நூல்) | ,, |
| 8181 | திருக்கேதாரத் திருப்பதிகம் | ,, |
| 8182 | திருவாமாத்தூர்த் திருப்பதிகங்கள் | ,, |
| 8183 | திருமுதுகுன்றத் திருப்பதிகங்கள் | ,, |
| 8184 | திருமயிலைத் திருப்புகழ் [உரையுடன்] | ஸ்ரீ கபாலீச்சுவரர் தேவஸ்தானம், மயிலாப்பூர், [சென்னை |
| 8185 & 86 | Mutt and Temples | Dharmapuram Adhinam |
| 8187 to 92 | மதுரை ஸ்ரீமீனாட்சிசுந்தரேஸ்வரர் கோயில்வரலாறு | மதுரை, ஸ்ரீ மீனாக்ஷி சுந்தரேஸ்வரர் ஆலய [வெளியீடு |
| 8193 & 94 | திருவாமாத்தூர்க் கலம்பகம் (உரையுடன்) | பதிப்பாளர் தி. கு. இராமசாமி [முதலியார் திருவாமாத்தூர் |

| | | |
|---|---|---|
| 8195 & 96 | திருவாமாத்தூர்த் தலவரலாறு (உரைநடை) | பதிப்பாளர் M. D. இராமசாமிரெட்டியாரவர்கள் [உரத்தூர் |
| 8197 & 98 | நளவெண்பா (மூலமும் உரையும்) | உ. வே. சாமிநாதையர் நூல் நிலையம், [அடையாறு, சென்னை |
| 8199 to 8218 | கட்டுரைக் கதம்பம் | வித்துவான் பாலூர் கண்ணப்ப முதலியார் [B. O. L. புதுக்கல்லூரி, சென்னை |
| 8219 | சிகிச்சாரத்ந தீபம் என்னும் வைத்தியநூல் | வைத்திய வித்வன் மணி சி. கண்ணுசாமி பிள்ளை [இயற்றியது |
| 8220 | சிவஞானபோதச் சிற்றுரை விளக்கம் | தூத்துக்குடி பொ. முத்தையபிள்ளை (எழுதிய விளக்கமும் உள்ளன) |
| 8221 | திருக்குறள் உரை விளக்கம் | ஜி. வரதராஜன், B. A., திருவள்ளுவர் நிலையம் [திருச்சி |
| 8222 | ஞானமிர்தம் (மூலமும் பழைய உரையும்) | பதிப்பாசிரியர் ஔவை சு. துரைசாமிப் பிள்ளை [அவர்கள் மதுரை |
| 8223 | சிவஞானபோத மூலமும் சிற்றுரையும் | அண்ணாமலைப்பல்கலைக் கழகத்தார் வெளியீடு |
| 8224 | குறுந்தொகை (மூலமும் உரையும்) | டாக்டர் உ. வே. சாமிநாதையர் [1953 |
| 8225 | சிவகங்கைச் சரித்திரக்கும்மியும் அம்மானையும் | சென்னை அரசாங்க வெளியீடு |
| 8226 | பாணினியதாது பாடம் (கிரந்தம், தேவநாகரி, தமிழ் எழுத்துக்களில் தமிழ்ப் பொருளுடன்) | பதிப்பாசிரியர் நீ. வை. வேங்கட சுப்ரம்ஹண்ய [சாஸ்திரி |
| 8227 | இந்திய வரலாறு (இரண்டாம் பாகம்) (இடைக்கால இந்தியா 1200–1707 வரை) | அண்ணாமலைப் பல்கலைக்கழக சரித்திர [வெளியீடு-17 |
| 8228 | கம்பர் கவிதைக்கோவை | அ. சே. சுந்தரராஜன் B. A., இலங்கை |

| | | |
|---|---|---|
| 8229 | திருக்கோவையார் (பேராசிரியர் உரையுடன்) | ஸ்ரீ காசிமடம் வெளியீடு-பதிப்பாசிரியர்- திரு. T. M. குமரகுருபரன் பிள்ளை B. A., B. L., [ஸ்ரீவைகுண்டம் |
| 8230 to 33 | திருஞானசம்பந்த சுவாமிகளின் அற்புதங்கள் | ஸ்ரீ சட்டைநாத சுவாமி தேவஸ்தானம், சீகாழி |
| 8234 | அமெரிக்காவிலுள்ள முதலாளித்துவம் (வர்க்க மற்ற சமூகம்) | பிரடரிக் மார்டின் ஸ்டெர்ன் - [தமிழாக்கம். கே. எஸ். ஜம்புநாதன் |
| 8235 to 37 | இலகு விஞ்ஞானம் (6, 7, 8ம் வகுப்பு) | வித்வான் எஸ். முத்து அய்யங்கார் பி. ஏ., (ஹானர்ஸ்) எல். டி. |
| 8238 to 40 | புதுமுறை இந்துதேச சரித்திரம் (1, 2, 3 புத்தகம்) | அம்பிகா பிரதர்ஸ், சென்னை |
| 8241 | சக்தி | R. K. விசுவநாதன் |
| 8242 | தமிழ்ப் புலவர் அகரவரிசை (முதற்பகுதி) | கழக வெளியீடு, ஆசிரியர் சு. அ. இராமசாமிப் |
| 8243 | தமிழ்ப் புலவர் அகரவரிசை (இரண்டாம் பகுதி) | ,, [புலவர் |
| 8244 | தமிழ்ப் புலவர் அகரவரிசை (மூன்றும் பகுதி) | ,, |
| 8245 | இயற்கைப் பாடமும் தோட்டவேலையும் (முதற்புத்தகம்) | K. S. இராமச்சந்திர அய்யர் B. A., B. T., |
| 8246 | ,, (இரண்டாம் புத்தகம்) | ,, |
| 8247 | ,, (மூன்றும் புத்தகம்) | ,, |
| 8248 & 49 | கந்தர் கலிவெண்பா- திருமுருகாற்றுப்படை | திரு. T. கோவிந்தராஜுலு நாயுடு அவர்கள் [கந்தசஷ்டி விழாமலர்-இலவச வெளியீடு |
| 8250 | சைவசமய சிந்தாமணி | கா. அருணுசல ஆசிரியர், மட்டக்களப்பு |
| 8251 | கவி பாடிய காவலர் | பா. து. கண்ணப்ப முதலியார் |
| 8252 | கந்தபுராண கலாசாரம் | பண்டிதமணி சி. கணபதிப் பிள்ளை |
| 8253 | வேங்கடம் முதல் குமரிவரை (பாலாற்றின் மருங்கிலே) | தொ. மு. பாஸ்கரத் தொண்டைமான் |
| 8254 | சிலேடை யகரவரிசை | திரு. சு. அ. இராமசாமிப் புலவர் |

| | | |
|---|---|---|
| 8255 | தமிழ் நாட்டு வள்ளல்கள் (முதற்புத்தகம்) | திரு. சு. இராமசாமிப் புலவர் |
| 8256 | யோக சாரம் | திரு. சுவாமி சிவானந்தர் |
| 8257 | ஞான யோகம் | ஷ |
| 8258 | துணிச்சலான புதிய திட்டம் | வில்லர்ட் ஆர். எஸ்பி. பா. லோகநாதன் [மொழி பெயர்ப்பு |
| 8259 | ஐக்கிய நாட்டு ஸ்தாபனம் வேலை செய்யும் முறை (டாம் கால்ட் எழுதியது) | மொழிபெயர்ப்பு எம். எஸ். கமலா |
| 8260 | காப்பிய நிகழ்ச்சிகள் | வித்துவான் தி. பட்டுச்சாமி ஓதுவார் |
| 8261 | நன்னெறி விளக்கம் (பகவான் சிவானந்தர் அருளியது) | தமிழாக்கம்-சுவாமி ராமானந்தா |
| 8262 | திருவாசக வியாக்கியானம் (முதற்பகுதி) நான்கு அகவல்கள் | சென்னை அரசாங்க வெளியீடு |
| 8263 | திருவாசக வியாக்கியானம் (இரண்டாம் பகுதி) பதிகங்கள் | ,, |
| 8264 | திருவுந்தியார் மூலமும் திருக்களிற்றுப்படியார் மூலமும் | மதுரை நாயகம் பிள்ளையவர்கள் |
| 8265 & 66 | புதுவை திரிபுரசுந்தரி மாலை வேதபுரீசர் பதிகங்கள் | ஸ்ரீமத் ஞானசித்த சுவாமிகள் |
| 8267 & 68 | காஞ்சி காமாட்சி அம்மை பிள்ளைத்தமிழ் | காஞ்சி இரா. குப்புஸ்வாமி, B. A., |
| 8269 & 70 | கங்கைகொண்ட சோழபுரம் - ஸ்ரீ பிருகதீஸ்வரர் (பெருவுடையார்) கோயில் வரலாறு | தேவஸ்தான வெளியீடு, மதுரை |
| 8271 & 72 | மரணபயம் தீரும்வழி | திருவருள் தவநெறி மன்ற வெளியீடு |
| 8273 to 75 | சிவஞான போதச் சிற்றுரையும் விளக்கமும் | சபா. சிவப்பிரகாசம்பிள்ளை-ஸ்ரீசுவேதாரண்யேஸ் [வரஸ்வாமி தேவஸ்தானம் திருவெண்காடு |

8276 & 77 அபிராமேஸ்வரப் பெருமான் கும்பாபிஷேக நினைவுமலர் (திருவாமாத்தூர்) — கும்பாபிஷேகக் குழுவினர், திருவாமாத்தூர்

8278 & 79 விக்ரக ஆராதனையின் விளக்கம்

8280 & 81 கந்தர் அனுபூதி மூலமும் யந்திரமும் உரையும் — திருவருள் தவநெறிமன்ற வெளியீடு, மதுரை

8282 திருத்தொண்டர் பெரிய புராண வசனம் — சைவ சித்தாந்த மகா சமாஜ வெளியீடு

8283 தெய்வத் தீந்தமிழ்ப் பாமாலை (இறைவழி பாட்டிற்கு உரியது) — ஸ்ரீலஸ்ரீ ஆறுமுக நாவலர் — திருமண விழா நினைவு வெளியீடு 17–4–1957

8284 பார்வதி கல்யாணம் — சித்தாந்த சைவச் செந்நெறிக் கழகம்

8285 திருவுத்தரகோச மங்கை தலபுராணம் (செய்யுளும் வசனமும்) — தேவஸ்தான வெளியீடு

8286 திவ்வியப் பிரபந்தத் திரட்டு — பதிப்பித்தோர் ந. சொ. அரு. அருணாசலன்

8287 பஞ்சாயத்துச் சட்டம் (புதியதிருத்தங்களுடன்) — தொகுத்தது முல்லை முத்தையா [சென்னை

8288 அன்றாட வாழ்க்கையில் சட்டங்கள் — நா. வேங்கடராமன் பி. ஏ., பி. எல்.,

8289 கோழி நோய்கள் — ச. கு. கணபதி ஐயர், எம். ஏ.,

8290 சின்னமனூர் என்னும் அரிகேசரிநல்லூர் தலபுராணம் — பூலானந்தக் கவிராயர்

8291 சென்னிமலையாண்டவர் பிள்ளைத் தமிழ் குறிப்புரையுடன்-உதயணன் கதை — வித்துவான் வே. ரா. தெய்வசிகாமணி - ஈரோடு

8292 ஸ்ரீ அருள்நந்தி சுவாமிகள் பிரபந்தங்கள் – 61வது ஜன்ம நட்சத்திரத் திருநாளன்று சமர்பித்த அன்பு மலர்த் தொகுதி — செந்தமிழ்க் கல்லூரி-திருப்பனந்தாள்

8293 சிவ சக்தி மந்திரம் — சிவசக்தி நிலையம்

8294 பெரியபுராணத்திலுள்ள எறிபத்தநாயனார் புராணத்தின் மெய்ப்பொருள் விளக்கம் — சச்சிதானந்த சுவாமிகள்

| | | |
|---|---|---|
| 8295 | ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் உயர் நிலைப்பள்ளி - ஆடுதுறை 7-வது ஆண்டறிக்கை 1957—58 | ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் உயர்நிலைப்பள்ளி, ஆடுதுறை |
| 8296 | விருத்தாசல சிவஸ்தல புராணம் வசனம் (திருமுதுகுன்றம்) | ஸ்ரீ முருகன் (மின்னியக்க) அச்சகம் [விருத்தாசலம் |
| 8297 | திருவெறும்பூர்க்கோயில் வரலாறு | தேவஸ்தான வெளியீடு |
| 8298 | சென்னைமாகாண குடிசைத்தொழில் சங்கம்-யாதாஸ்தும் விதிகளும் | சென்னை மாகாண குடிசைத் தொழில் சங்கம் |
| 8299 | திருநாவுக்கரசர் திருவடிப் புகழ்மாலை ப. தி. சோ. குமரசாமி செட்டியார் நினைவு மலர் | சோ. சிங்காரம் செட்டியார் அவர்களால் [வெளியிடப்பெற்றது |
| 8300 | கல்விச் சிந்தனைகள் | ஆச்சாரிய வினோபா பாவே |
| 8301 | திருநரையூர்ப் புராணம் | ரா. முத்துக்குமார பிள்ளையால் பதிப்பிக்கப் [பெற்றது |
| 8302 | அருள் விருந்து | சத் சங்கம், சென்னை |
| 8303 | திருப் புகழ்த்திரட்டு | பதிப்பித்தவர் ந. சொ. அரு. அருணாசலன் |
| 8304 | திருவெம்பாவை–திருப்பள்ளியெழுச்சி | V. R. முத்துசாமிப் பிள்ளை அவர்கள் 62ஆண்டு [நிறைவு விழா அன்பளிப்பு |
| 8305 | ஸ்ரீ காசி இராமேச்சுரயாத்திரை | ஸ்ரீமதி K.A. முத்துலட்சுமி அம்மாள் கொடுமுடி |
| 8306 | காவேரி என் காதலி | 'நாதி' நக்கீரன் வெளியீட்டகம் |
| 8307 | திருக்கேதார-பத்ரிநாதயாத்திரை | ஸ்ரீ R. கிருஷ்ணஸ்வாமி அய்யர் |
| 8308 | விநாயகரகவல் (மூலமும் உரையும்) | ஸ்ரீ வெங்கடேஸ்வர் அச்சுக்கூடம் கும்பகோணம் |
| 8309 | ஸ்ரீ நாகேஸ்வரசுவாமி கோயில் வரலாறு | தேவஸ்தான வெளியீடு-கும்பகோணம் |
| 8310 | பணம் | திரு. ரெ. சேஷாசலம் எம். ஏ. |
| 8311 | தூது சென்ற தூயர் | வித்துவான் பாலூர் கண்ணப்ப முதலியார் |
| 8312 | விநாயக பரத்துவம் | ச. குமாரசுவாமிக் குருக்கள் |

| | | |
|---|---|---|
| 8313 | அலங்காரர்மாலை | திருவல்லிக்கேணித் தமிழ்ச் சங்க வெளியீடு |
| 8314 & 15 | ஸ்ரீமத்யார்ச்சுன மான்மியம் என்னும் மருதவனப் புராண வசனம் | திருவிடைமருதூர் ம. சோ. பிச்சைய தேசிகர் |
| 8315A.8316 | களக்காட்டுச் சத்தியவாசகர் இரட்டைமணி மாலை- உ. வே. சாமிநாதையர் | கலைமகள் வெளியீடு |
| 8317 | வள்ளலார் வகுத்த வழிகள் (குறிப்புரையுடன் கூடியது) | வித்துவான் பாலூர் கண்ணப்ப முதலியார் |
| 8318 | சேக்கிழார், (கலைவிழாமலர்) | வித்துவான் T. S. தேவசேனுபதி தேசிகர் |
| 8319 | சைவாநுட்டான அகவல் | ஸ்ரீ ஞானப்பிரகாச பட்டாரகர் |
| 8320 | திருவாவடுதுறை ஆதீன வித்வான் திரு. T. S. மீனுட்சிசுந்தரம் பிள்ளை வரலாறு | இரா. இராமசேஷன் B. A., |
| 8321 | திருமுருகாற்றுப்படை விளக்கம் | R. பஞ்சநதம் பிள்ளை |
| 8322 | தருமதீபிகை | ஜெகவீரபாண்டியனுர் |
| 8323 | சித்தாந்த ஞானரத்தினுவளி (முதற்பாடம்) இரண்டாவது ஆண்டு நிறைவு விழா வெளியீடு | நெல்லை சித்தாந்த சைவச் செந்நெறிக் கழக ]வெளியீடு |
| 8324 | பகவான் சிவானந்தரின் ஞானவிருந்து | சுவாமி இராமானந்தா |
| 8325 | நாடும் நவீனரும் | ஆ. ஈசுரமூர்த்திப் பிள்ளை |
| 8326 | சைவாநுட்டானவிதி | வாலையானந்த சுவாமிகள் |
| 8327 | திருக்குற்றாலநாத சுவாமி கோயில் சார்வரி வருட நாட்குறிப்பு | கோயில் வெளியீடு |
| 8328 | அடியார் வழிபாடு சிறந்ததேன் | பூதூர் துரைவேலு முதலியார் |
| 8329 | காந்திஜியும் அவரின் ஆத்மீக சக்தியும் | திருநெல்வேலி டயோசீசன் பிரஸ், [பாளையங்கோட்டை |

| | | |
|---|---|---|
| 8330 | நித்திய கல்யாண சுந்தரி வரகுண பாண்டீசுவரர் புகழ் மலர் | அகிலாசுதன் |
| 8331 | வானர மதுரைத்தல புராண வசனம் | வ. த. சுப்பிரமணிய பிள்ளை |
| 8332 | திருமுருகாற்றுப்படை கந்தர்கலிவெண்பா (உரை வசனங்களுடன்) | கா. சுப்பிரமணிய பிள்ளை M. A., M. L., |
| 8333 | மயூர கிரிப்புராண சாரமும் வெண்பா மாலையும் | ஸ்ரீ சஷ்டிச் சுவாமிகள் பரிமணங்குடி |
| 8334 | ஆறுபடைவீட்டு ஸ்ரீ முருகர் ஆறுசோடசப்பா | ,, |
| 8335 | திருவலிவலத்தல வரலாறு | திருவலிவலத் தேவஸ்தான வெளியீடு |
| 8336 | ஸ்ரீ பாரத சாரவெண்பா | S. பெருமாள் சுவாமிகள் |
| 8337 | கிரேக்க நாட்டுப் பழமைப் பண்புகள் | வித்வான் பாலூர் கண்ணப்ப முதலியார் B. O. L. |
| 8338 | தமிழர் போர் முறை | ,, [சென்னை |
| 8339 | சிதம்பரத்தோத்திரத்திரட்டும் சில சிறந்தசெய்யுட்களும் | சி. ப. விசுவநாத சுவாமி |
| 8340 | அறுசுவைக் கட்டுரைகள் (உயர் வகுப்புகட்கு) | வித்வான் பாலூர் கண்ணப்ப முதலியார் B. O. L |
| 8341 | முப்பொருள் விளக்கம் | சிவஸ்ரீச. குமாரசுவாமிக் குருக்கள் |
| 8342 | சிறுத்தொண்ட நாயனுர் வரலாறு | கயப்பாக்கம் சோமசுந்தரம் செட்டியார் |
| 8343 | குழந்தைக் கவிராயர் இயற்றிய மான் விடுதூது (குறிப்புரையுடன்) | தியாகராஜ விலாச வெளியீடு |
| 8344 | திருமாலிருஞ்சோலைமலை அழகர்கிள்ளை விடுதூது | பலபட்டடைச் சொக்கநாத பிள்ளை |
| 8345 to 48 | திருஞானசம்பந்தர் திருவாய் மலர்ந்த 1, 2, 3, திருமுறைப் பெருமை | சேவு. மெ. மெய்யப்பச் செட்டியார் [தேவகோட்டை |
| 8349 to 53 | கம்பர் அருளிய சரஸ்வதி அந்தாதி | ஸ்ரீ குமரகுருபரன் பிரஸ் திருப்பனந்தாள் |
| 8354 to 59 | சைவாலயங்களில் சம்ஸ்கிருத மந்திரங்களே வேண்டும் • | ஆ. ஈசுரமூர்த்திப்பிள்ளை [விஜயதசமி வெளியீடு. |

| | | |
|---|---|---|
| 8360 | ஸ்ரீரங்கராஜமாலை | திருவல்லிக்கேணித் தமிழ்ச் சங்கவெளியீடு |
| 8361 | குமரோதயம் அல்லது அகந்தையின் அழிவு (நாடகம்) | மகாகவி திரு. நா. பிச்சுமணி |
| 8362 | திருமருகல் தலவரலாறு | திருமருகல் ஸ்ரீ இரத்தினகிரீஸ்வர ஸ்வாமி [தேவஸ்தான வெளியீடு |
| 8363 | முருக மஞ்சரி | திருமயிலை சே. வெ. ஜம்புலிங்கம்பிள்ளையவர்கள் |
| 8364 | சிதம்பர க்ஷேத்திர மகிமை (3வது பதிப்பு) | சி. பி. மாசிலாமணி பி. ஏ., |
| 8365 | நூற்றெட்டுத் திருக்குறள் | வாலாஜாபாத் இந்துமத பாடசாலை, வள்ளலார் [மாணவர் இல்லம் |
| 8366 | கார்த்திகை விளக்கீடு (உரையாடல் படங்களுடன்) | 'சித்தாந்தச் செம்மணி' ச. சிவகாமி அம்மையார் |
| 8367 & 68 | திருக்குறள்-அறத்துப்பால் பரிமேலழகர் உரை இலக்கணக் குறிப்பின் விளக்கம் | வித்துவான், வை. சுந்தரேச வாண்டையார் |
| 8369 | திருநாரையூர்த் தலவரலாறு | தருமபுர ஆதீன வெளியீடு |
| 8370 & 71 | திருவிடைக்கழி ஸ்ரீ சுப்பிரமணிய சுவாமித் தலத்தின் புராண வரலாறும் க்ஷேத்திர மகாத்மியமும் | அஷ்டபந்தன மகா கும்பாபிஷேகத்தன்றைய [வெளியீடு |
| 8372 | ஔவைப்பிராட்டியார் அருளிச் செய்த விநாயகர் அகவல் | ஸ்ரீ மஹாபாரதம் பிரஸ்-கும்பகோணம் |
| 8373 | பெரிய பெருமாள் மாலை | திருவல்லிக்கேணித் தமிழ்ச்சங்க வெளியீடு |
| 8374 | நவரத்தினசாமி நீச்சுவீரன் வாழ்க | காவலூர் கவிஞர், ஜி. எம். செல்வராஜ் |
| 8375 | அபிராமிபட்டர் அருளிச் செய்த அபிராமியந்தாதி உரையுடன் | ம. க. வேற்பிள்ளை |
| 8376 | ராஜ ராஜேஸ்வரியின் திருநடன பதிகமாலையும் திருமூலமந்திரமும் | ஜோதிடன், நா. வெ. வெங்கட்ராமன் |
| 8377 | சொக்கநாதமாலை | முத்துச்சாமிப் பிள்ளை |

| | | |
|---|---|---|
| 8378 | பாவைப்பாட்டும் உரையும் | உரையாசிரியர் ருய. சொ. |
| 8379 to 82 | துவாதசஜோதிர்லிங்கம்-சோமநாதம் | தருமபுர ஆதீன வெளியீடு |
| 8383 | யாப்பருங்கலக்காரிகை மூலமும் உரையும் | திருநெல்வேலி, சைவ சித்தாந்த நூற்பதிப்புக் [கழகம் |
| 8384 to 86 | சிவஞானசித்தியார் சுபக்கச் சுருக்க வினாவிடை | சபா. சிவப்பிரகாசம் பிள்ளை |
| 8387 to 96 | பண்டாரசாத்திரம் சன்மார்க்க சித்தியாரும் சிவாச்சிரமத் தெளிவும் (உரையுடன்) | திருவாவடுதுறை ஆதீனம் |
| 8397 | ஞானசம்பந்தம் (6வது ஆண்டு மலர்) | தருமபுர ஆதீனம் |
| 8398 | செந்தமிழ்ப் பூம்பொழில் | ,, |
| 8399 to 8402 | நேப்பாளமும்-கேதாரமும் | திருவாவடுதுறை ஆதீனம் |
| 8403 to 8408 | சிவப்பிரகாசம்-சீர்மைக் கட்டுரை மங்கல வாழ்த்துப் பகுதி | ,, |
| 8409 to 16 | திரு அண்ணுமலைத் திருப்பதிகங்கள் | தருமபுர ஆதீனம் |
| 8417 | தக்கயாகப் பரணி (மூலமும் உரையும்) | டாக்டர். உ. வே. சாமிநாதையர் நூல் நிலையம், |
| 8418 | கலைக்களஞ்சியம் பருகூர்—பௌதிகம் (7-ம் பகுதி) | தமிழ் வளர்ச்சிக் கழகம் [சென்னை |
| 8419 | முருகன் | திருவாவடுதுறை ஆதீனம் |
| 8420 | Two Thousand Years of Tamil Literature | J. M. Somasundaram Pillai, B. A., B. L., |
| 8421 | A Descriptive Catalogue of the Tamil Manuscripts in the Government Oriental manuscripts Library, Madras | T. Chandrasekharan, M., A., L., T., |
| 8422 | Sivananda the yogi of India | Sivanandanagar The Yoga Vedanta forest [academy |
| 8423 | The Philosophy and Significance of Idol Worship | Sri Swami Sivananda |
| 8424 | Guide to sivananda yoga Museum | Published by The Yoga Vedanta forest [Academy |

| | | |
|---|---|---|
| 8425 & 26 | Tiruvacagam English Translation | Rev. G. U. Pope, M. A. D. D. |
| 8427 to 31 | Souvenir Sixty first birth day Celebrations of His Holiness Srilasri Kasivasi Arulnandi Tambiran Swamiji Tirupanadal | Published by The Celebration Committee [Varanasi |
| 8432 | ஸ்ரீ குமரகுருபரசுவாமிகள் பிரபந்தத் திரட்டு | ஸ்ரீ காசிமடம் திருப்பனந்தாள் |
| 8433 | Sivananda Day-To-Day and His Philosophy and Teachings (Volume I) | Sri Atmaram Makhijani (S. D. L. S.) |
| 8434 | Yoga for the Modern Man | Sri Swami Sivananda |
| 8435 | Siva-Rajya | Dharmapuram Adhinam |
| 8436 | Ramakrishna Mission its Ideal & Service | Golden Jubilee Memorial Ramakrishna [Mission Home of Service Banaras |
| 8437 | See India-Madras | Govt. of India - The Tourist Traffic [Branch Ministry of Transport, New Delhi |
| 8438 | Ten Upanishads with notes & Commentary | Sri Swami Sivananda |
| 8439 | Radiant Health Through Yoga | " |
| 8440 | Madras city Tourist's guide | Editor. S. Kalyanasundaram Pillai |
| 8441 | Advaita-Tattva sudha (first part) | Mahamahopadhyaya Sastraratnakara Satabhusani N. S. Ananthakrishna sastry & Pandit. D. Satyanarayana Sastry M. A. |
| 8442 | ஸரஸ்வதீய சித்ரகர்ம சாஸ்திரம் | T. M. S. S. M. Library Tanjore |
| 8443 | Brahmeeya Citrakarma Sastram with Tamil Translation | " |

| | | |
|---|---|---|
| 8444 | Special Lectures on Saiva Siddhanta | Sivabkahtamani Tiruvachakamani K. M. [Balasubramaniam |
| 8445 | Tamil Culture vol. VIII No. 4, Octr-Decr 1959 | Journal of the Academy of Tamil Culture |
| 8446 | Hymns of the Tamil Saivite Saints | F. Kingsbury B. A. & G. E. Phillips B. A. |
| 8447 | Tiruchendur - The sea shore Temple of Sri Subramaniam | J. M. Somasundaram B. A., B. L., [Lon., |
| 8448 | The Madras Hindu Religious and charitable Endowments Act. Madras Act XIX of 1951 | Thompson & Co., Ltd., Madras |
| 8449 | Rules under Madras Hindu Religious and Charitable Endowments Act (1951) | ,, |
| 8450 | Le-Gitalamkara Bharata | Par Alain Danielow - et N. R. Bhatt |
| 8451 | An Elucidation of the Tiruppasuram | Printed at The Saiva Prakasa Press |
| 8452 | Sri Masilamaneeswarar Temple Thirumullai-voyal Avadai Po. | S. V. Press Triplicane Madras [Jaffna |
| 8453 | Manuring of Paddy | Chilean Nitrate Committee (Indian [Delegation Calcutta |
| 8454 | முருகவேள் பன்னிரு திருமுறை - கந்தரநுபூதி, வேல் விருத்தம், மயில் விருத்தம் | பதிப்பாளர் ஸ்ரீமதி மீனுக்ஷிகல்யாண சுந்தரம் |
| 8455 | முருகவேள் பன்னிருதிருமுறை மயில்விருத்தம், சேவல் விருத்தம், 11-ஆம் திருமுறை | ,, |
| 8456 & 57 | The Art Gallery Tanjore Souvenir | Published on the occasion of the inaugu- [ration and opening of the Art Gallery |

| | | |
|---|---|---|
| 8458 | குமரகுருபர சுவாமிகள் இயற்றியருளிய வைத்தீசுரன் கோயில் முத்துக்குமாரசாமி பிள்ளைத்தமிழ்ப் பாட்டும், கரந்தைப்புலவர் கல்லூரி தமிழ் விரிவுரையாளர் வித்துவான் அடிகளாசிரியரவர்கள் எழுதிய சொற்பொருளுரையும் | வித்துவான் அடிகளாசிரியர் |
| 8459 | பிறந்தது எப்படியோ | தெ. பொ. மீனாட்சிசுந்தரம் |
| 8460 | நாளிலைச் சதகம் (பாட்டும் - பொருளும்) | திருப்புகழ்ச் சுவாமிகள் என்னும் தண்டபாணி [சுவாமிகள் |
| 8461 | பஜன்-கீர்த்தன்-மாலை | The Sivananda Publication League [Rishikesh |
| 8462 | திருவருட்சதகமாலை | திருவல்லிக்கேணித் தமிழ்ச் சங்க வெளியீடு |
| 8463 | ஆனைபரிதேரின் மேலழகர் மாலை | ,, |
| 8464 | திருச்செந்தின் மாலையும் திருச்செந்தூர் நான்மணி மாலையும் (குறிப்புரைகளுடன்) | பதிப்பாசிரியர்: S. கலியாணசுந்தரையர் |
| 8465 | திருமயிலைத் திருப்புகழ் (உரையுடன்) | ஸ்ரீ கபாலீச்சுவரர் தேவஸ்தானம் சென்னை |
| 8466 & 67 | சரணபத்ததி | திரு. நா. பிச்சுமணி |
| 8468 | ஐயப்பன் போற்றிசை | ,, |
| 8469 | ஸ்ரீ குமரகுருபரஸ்வாமிகள் உயர்நிலைப்பள்ளி ஆடுதுறை ஆண்டுமலர் 1954—55 | ஆடுதுறை உயர்நிலைப்பள்ளி |
| 8470 | ஐந்தாண்டு அபிவிருத்தி-தஞ்சாவூர் ஜில்லா | சென்னை சர்க்கார் செய்தி இலாகாவின் வெளியீடு |
| 8471 | திருக்கூடலையாற்றூர்ப் புராணம் | ந. சந்திரசேகர நாயகர் |
| 8472 | கைத்தொழில் நுட்பங்கள் | P. V. வேலு வைத்தியர் |
| 8473 | திருத்தணிகாசல க்ஷேத்திர மகிமை (3-ம் பதிப்பு) | பி. மாசிலாமணி முதலியார் பி. ஏ., |

| | | |
|---|---|---|
| 8474 | உள நூல் | M. குஞ்சிதபாத தேசிகர் |
| 8475 | கால்நடை சிகிச்சை | சுந்தரம்மீனுட்சி |
| 8476 to 77 | பராசக்தி கீதம் | திரு. நா. பிச்சுமணி |
| 8478 | மெய் கண்டார் வரலாறு | ஸ்ரீ முருகன் (பவர்) பிரஸ் விருத்தாசலம் |
| 8479 | ஸ்ரீ ராமகிருஷ்ணு மிஷன் வித்யாலயம் அறிக்கை 1959—60 | இராமகிருஷ்ணு வித்யாலயம் கோயம்புத்தூர் [ஜில்லா |
| 8480 | பழந்தமிழரும் முருகன், முக்கண்ணன் வணக்கமும் | டாக்டர் தி. இரா. அண்ணுமலைப்பிள்ளை |
| 8481 | திருவரத்துறை எனவழங்கும் திருநெல்வாயில் அரத் துறைத் தலவரலாறு | வெளியிட்டோர் கா. வெ. இராமசாமி ஐயங்கார் |
| 8482 | நிலச்சட்டங்கள் நியாயவாரச் சட்டம் (1956) சாகுபடி தார் பாதுகாப்புச் சட்டம் உதாரணங்களுடன் | 'வக்கீல்' தமிழ் சட்டப்பத்திரிகை |
| 8483 & 84 | சிவனடியார் திருக்கூட்டத்தின் 6-வது ஆண்டு நிறைவு விழாவில் மதுரை ஆதீன திருப்பெருந்திரு, திருவருள் தவயோக சோமசுந்தர தேசிக பரமாசாரிய சுவாமிகள் தலைமைப் பேருரை (1954 ஜனவரி) | சிவனடியார்த் திருக்கூட்டம், திருக்குடந்தை |
| 8485 | குளத்தூர்ச் சோமேசர் முதுமொழி வெண்பா (மூலம்) | திருவாவடுதுறை ஆதீனம் வித்துவான் [த. ச. மீனுட்சிசுந்தரம் பிள்ளை |
| 8486 | திருக்குறள் (கடவுள் வாழ்த்து) | ம. ரா. மாணிக்கம் M. A. உரையாசிரியர் |
| 8487 | தஞ்சை சாகுபடிதார் பண்ணையாள் பாதுகாப்பு அவ சரச்சட்டம் விதிகள் உள்பட விளக்கம் | 'வக்கீல்' பிரசுரம் |
| 8488 | திருநாவுக்கரசு சுவாமிகள் வரலாறு | கயப்பாக்கம் சோமசுந்தரம் செட்டியார் |
| 8489 | எண்களின் சிறப்பு | ம. சுடலைமுத்துப்பிள்ளை |
| 8490 | மூன்று உண்மைகள் | இளவழகனுர் |

| | | |
|---|---|---|
| 8491 | சேக்கிழார் சுவாமிகள் வரலாறு | கயப்பாக்கம் சோமசுந்தரம் செட்டியார் |
| 8492 | பாணந்துறைக் கந்தரந்தாதி | பண்டிதர் த. சுப்பிரமணியம் |
| 8493 | கும்பகோணம் நகர்மன்றம் காங்கிரஸ்கட்சி அறிக்கை 1953 ஆகஸ்டு, 15 | கும்பகோணம் நகர்மன்றம் காங்கிரஸ் கட்சி |
| 8494 | தோத்திரப்பாடல் திரட்டு (உரையுடன்) | அ. கி. பரந்தாமனார், எம். ஏ. |
| 8495 | லெட்சுமிபுரம் சொக்கலிங்க வித்தியாசாலை 28-வது ஆண்டு அறிக்கை | வித்தியாசாலை வெளியீடு |
| 8496 | அத்புத கேஸரிமாலை | திருவல்லிக்கேணித் தமிழ்ச் சங்க வெளியீடு-69 |
| 8497 | தில்லைச் சிற்றம்பலப்பெருங் கோயிலின் பழைமையும் திருச்சித்திரக்கூட அமைப்பும் | தில்லைத் திருமுறைக் கழகத்தார் சிதம்பரம் |
| 8498 | சீகாழி, ஸ்ரீமான் S. சுப்பராய முதலியார் அவர்களின் 60-வது ஆண்டு நிறைவு 'நினைவுமலர்' | ஸ்ரீ அம்பாள் பிரஸ் சீர்காழி |
| 8499 | விரைநான்மணிமாலை | கா. ந. நெல்லையப்பன் செட்டியார் |
| 8500 | ஒளி வழிபாடு | இளவழகனார் |
| 8501 to 8503 | மதுரை மாநகரம் | தருமபுராதீன வெளியீடு T. H. விவேகானந்தம் [பிள்ளை B. A., L, T., |
| 8504 | இராமேஸ்வரமும் புண்ணிய சேதுவும் | இராமேஸ்வரம் தேவஸ்தான வெளியீடு |
| 8505 | Rameswaram & Holy Sethu | Rameswaram Devastanam Committee |
| 8506 & 8507 | தேவார இசை அரங்கு | திரு. P. சாமிநாதன் |
| 8508 | சைவசமய நிலையங்களின் தற்கால நிலை | மா. சிவகுருநாத பிள்ளை |
| 8509 & 8510 | திருச்செந்தூர் | தருமபுராதீன வெளியீடு T. H. விவேகானந்தம் [பிள்ளை B. A., L. T., |
| 8511 | திருக்குளந்தை வடிவேலன் பிள்ளைத்தமிழ் | சு. சபாபதி முதலியார் |
| 8512 to 14 | திருமுறைத்திரட்டு கருத்துரையுடன் (ஸ்ரீ உமாபதி சிவாசாரிய சுவாமிகள் திரட்டியருளியது | தில்லைத் திருமுறைக் கழக வெளியீடு |